TAMIL

# ILAKKIYA VACHAKAM

BOOK VI






PUBLISHERS :

G. S. VISWA & Co.,

...ane : : MADRAS.



Price As. 10.

# தமிழ் இலக்கிய வாசகம்

## ஆறும் வகுப்பு

Approved by the Madras Text Book Committee for class use in Elementary and Secondary Schools
Vide Fort St. George Gazette. Part I-B Page 3 dated 25—4—44 & Part II Page 10 dated 25—4—44.

ஆசிரியர்கள் :
பெங்களூர், அர்ச். சூசையப்பர் கல்லூரித் தமிழ் விரிவுரையாளர்
**T. V. செங்கல்வராய முதலியார்**
&
பெங்களூர், அர்ச். யூப்ரஸீஸ் பெண்கள் உயர்தரக் கலாசாலை ஆசிரியர்
**மிஸ். S. ஸாலமன், பி.ஏ., எல்.டி.**




**ஜி. எஸ். விச்வா & கம்பெனி**
**திருவல்லிக்கேணி : : சென்னை**
பதிப்புரிமை] 1946 [விலை அணு 10

*First Edition* 1943
*Second Edition* 1944
*Third Edition* 1945
*Fourth Edition* 1946

# முகவுரை

ஒருவருடைய கல்விக்கும் முன்னேற்றத்திற்கும் மொழிப் பயிற்சியே அடிப்படையாக அமைந்துள்ளது. மனம், நா, கை ஆகிய மூன்றுறுப்புக்களையும் நன்முறையிற் பழக்குவதற்கும் அப்பயிற்சியே இன்றியமையாததா யிருக்கிறது. நன்றாய் ஆலோசிப்பதற்கும், எண்ணியவற்றை எண்ணியபடியே பிறர்க்கு அறிவிப்பதற்கும் எவர்க்கும் மொழிப் பயிற்சி வேண்டியதா யிருக்கிறது. ஆகவே, இப்பயிற்சிக்கு எவ்வளவு கவனம் கொடுக்கப்படினும் அது வீணாகாது.

நம் நாட்டில் தாய்மொழிப் பயிற்சிக்கு இக்காலத்திற் போதிய கவனம் கொடுக்கப்படவில்லையென்று பலரும் குறை கூறி வருகின்றனர். வேறு பாடங்களுக்குக் கையாளப்படும் கருவிகள், முறைகள் முதலியன தாய்மொழிக்கு அமையவில்லை யென்பதே அவர்கள் கூறும் குறையாகும். 'தாய்மொழி தானே வருவதொன்று ; அதற்குப் பிற பாடங்களைப் போல அவ்வளவு கவனம் செலுத்தப்பட வேண்டியதில்லை' என்ற மனப்பான்மை இக்குறைகளுக்குக் காரணமாகலாம்.

ஆனால், ஆழ்ந்து யோசிக்குமிடத்து, தாய்மொழிக்கே அதிகக் கவனம் செலுத்தப்படல் வேண்டும் என்பது புலனாகும். அங்குச் சரியான முறைகள் ஆரம்பமுதல் கையாளப்படுமானால் பிற பாடங்கள் இலகுவிற் கற்பிக்கப்படலாம். மௌனமாகப் படித்தல், உரக்கப் படித்தல், வேகமாகப் படித்தல், ஆழ்ந்து படித்தல், நன்றாய் உச்சரித்தல், பிழையற எழுதல், சொலைனார்டல், கட்டுரை வரைதல், வினாதல், வினவியவற்றை விடுதல் முதலிய பயிற்சிகளால் மாணவர்க்குச் சிறந்த மொழிவளமுண்டாகும்.

இவற்றோடு உரிய பிராயத்திலேயே மாணவர்கள் இலக்கியப் பண்புகளையும் சிறுகச்சிறுக அறியத் தொடங்குவது அவசியமாகும். உயர்ந்த நூலாசிரியர்களின் மனோபாவங்கள்,



வருணனைகள், நீதிமுறைகள் இவற்றை மாணவர்கள் இளமை யிலேயே உணர்ந்து இன்புறுவது அவர்களின் பிற்கால வாழ்க் கைக்குப் பேருதவியாகும். இவற்றோடு நல்லொழுக்கம், தேச பக்தி, மதவுணர்ச்சி இவற்றைப் பெறுவதற்கும் இலக்கியப் பயிற்சி பெரிதும் பயன்படுவதாகும்.

இந்நோக்கங்களையெல்லாம் கொண்டு இவ்வரிசைப் புத்த கங்கள் எழுதப்பெற்றுள்ளன. பாடங்களின் அமைப்பும், பயிற்சிகளின் பாகுபாடுகளும் இந்நோக்கங்கள் கைகூடவே வகுக்கப்பட்டுள்ளன. பாடங்களின் தலைப்புக்களில் அமைந் துள்ள முகவுரைகள் அப்பாடங்களில் மாணவர்களுக்குச் சுவை உண்டாக்கவும், அவற்றை அவர்கள் படிக்கும் முறையை முன்பாகவே உணர்த்தவும் பயன்படும். பயிற்சி களில் சொல்லாக்கம் என்னும் பகுதி ஆசிரியர்களால் நன்கு கவனிக்கப்படவேண்டியதாகும். இலக்கணப் பகுதி துரைத் தனத்தார் வெளியிட்டுள்ள பாட திட்டத்தை முற்றிலும் ஒட்டியதே. கேள்விகளும் கட்டுரைகளும் மாணவர்களின் பேச்சு வன்மையையும், எழுத்து வன்மையையும் எளிதில் ஊக்கக்கூடியவை. இப்பயிற்சிகளை மாணவர்களும் ஆசிரியர் களும் நன்கு பயன்படுத்திக்கொள்வார்களாக.

தத்தம் அருமையான பாடல்களையும் கட்டுரைகளையும் இப்புத்தகத்தில் எடுத்தாள அன்புடன் அனுமதியளித்த பெரியோர்களுக்கு எமது மனமார்ந்த நன்றி உரியதாகும்.

மாணவர்களுக்குத் தமிழபிமானமும், ஆராயும் சக்தியும், இலக்கியங்களை அனுபவிக்கும் ஆற்றலும் மேன்மேலும் வளர இப்புத்தகங்கள் உதவவேண்டுமென்பதே எம் நோக்கம். அந்நோக்கம் நன்கு நிறைவேற எல்லாம் வல்ல இறைவர் அருள்வாராக.

**பிரசுரகர்த்தர்.**

---

# பொருளடக்கம்



## உரைநடைப் பகுதி



## செய்யுட் பகுதி

# தமிழ் இலக்கிய வாசகம்

## ஆறும் வகுப்பு

### 1. பாரத நாடு*

[நாம் வாழும் நாட்டைப் பெரியோர்கள் பாரதநாடு என்ற பெயரால் அழைப்பர். பரதன் என்ற பெயருள்ள ஓர் அரசன் ஆண்டநாடு என்பது இதன் பொருள். இந்நாட்டின் பெருமைகளிற் சிலவற்றை இப்பாடல்கள் கூறும். இவற்றை மனப்பாடம் பண்ணி இசையுடன் பாடக் கற்றுக்கொள்ளுவது நலமாகும்.]

மலைகளிலே உயர்மலையை மகிழ்ந்தணியு நாடு ;
மாநதியுள் வானதியே மல்குதிரு நாடு ;
உலகில்விளை பொருளெல்லாம் உதிக்கின்ற நாடு
ஒண்தொழிலும் வாணிபமும் ஓங்கியசீர் நாடு ;
கலைகளோடு மறைமுடியைக் கண்டதவ நாடு ;
கடவுளருட் கோயில்களே காட்சியளி நாடு ;
பலசமய உண்மையெலாம் பரந்தொளிரு நாடு ;
பழமைமிகு புகழ்பெருகு பாரதநன் னாடே. (1)

உண்மையரிச் சந்திரனை உவந்தளித்த நாடு ;
உயர்ஜனகன் ராமபிரான் உலவியபொன் னாடு ;
கண்ணன்விளை யாடலெல்லாங் கண்டுகளி நாடு ;
கன்னனோடு பஞ்சவர்கள் காத்ததனி நாடு ;

---

* இப்பாடல்கள் ஆசிரியர் அன்புடன் அளித்த அனுமதிபெற்றுப் பதிப்பிக்கப்பெற்றன.

தண்மைநிறை புத்தரவர் தருமம்வளர் நாடு ;
தகைமையுறு வள்ளுவர்தம் தமிழ்பிறந்த நாடு ;
பண்ணமரும் கரிகாலன் பரித்தபுகழ் நாடு ;
பகைவர்களும் தொழுதேத்தும் பாரதநன் னாடே.

—திரு. வி. கலியாணசுந்தர முதலியார்

### குறிப்புக்கள்

1. மலைகளிலே உயர் மலை - இமயமலை. மகிழ்ந்து + அணியும் + நாடு. வான்நதி - கங்கை. மல்கு - விளங்கும். ஒண் - பிரகாசமுள்ள ; மேன்மையான. வாணிபம் - வியாபாரம். மறைமுடி - வேதத்தின் முடிவு ; வேதாந்தம். சமயம் - மதம். பரந்து - அகன்று. ஒளிரும் - விளங்கும்.

2. உவந்து - மகிழ்ந்து. உலவிய - உலாவிய. பொன் + நாடு = பொன்னாடு. கண்ணன் - கிருஷ்ண பகவான். கன்னன் - கர்ணன். பஞ்சவர்கள் - பஞ்சபாண்டவர்கள். பரித்த - காத்த ; தாங்கிய. ஏத்தும் - புகழும்.

### கேள்விகள்

(1) உலகிலுள்ள மலைகளிற் பெரியது எது ?
(2) நம் நாட்டில் விளையும் உணவுப் பொருள்கள் சிலவற்றின் பெயர்களைக் கூறுக.
(3) பாரத நாட்டின் கல்விப் பெருக்கைப் பற்றிக் கூறும் அடி யாது ?
(4) இந்நாட்டை யாண்ட பெரிய அரசர்கள் சிலரின் பெயர் களைக் கூறுக.
(5) இராமபிரான் வரலாற்றைக் கூறும் புத்தகத்தின் பெயர் என்ன ?
(6) கன்னன், பஞ்சவர் ஆகியவர்களைப் பற்றிக் கூறும் புத்தகம் யாது ?
(7) வள்ளுவர் தமிழுக்குச் செய்த உதவி யாது ?
(8) பாரத நாடு என்ற பெயருக்குக் காரணம் என்ன ?

### கட்டுரை

(1) பாரதநாட்டின் மேன்மைகளைப்பற்றி ஒரு கட்டுரை எழுதுக.

(2) இரண்டாவது செய்யுளில் எவரெவருடைய பெயர்கள் கூறப்பட்டிருக்கின்றன ? ஒவ்வொருவரைப் பற்றியும் சிற்சில வாக்கியங் கள் கூறுக.

## 2. வாசுகியம்மையார்





[ஏறக்குறைய இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் தமிழ் நாட்டில் திருவள்ளுவர் என்ற பெரியார் வாழ்ந்தார். அவர் மனைவியார் கற்பில் மிக்க மேன்மை பெற்றிருந்தார். அவருடைய கற்பின் தன்மைகளையும், அக்கற்பால் அவர் அடைந்திருந்த சக்திகளையும் இப்பாடம் விளக்குகிறது.

இதனை உதடசைக்காமல் படி.

படித்து முடிக்க எவ்வளவு நேரம் பிடிக்கிறது ?

படிக்கும்போது, 'கற்பெனப்படுவது சொற்றிறம்பாமை' என்பதற்கு உதாரணமாக வாசுகியார் நடத்தையிலிருந்து உதாரணங்களை ஆராய்ந்து கொள்க.

படங்களை நன்றாகக் கவனித்துத் திருவள்ளுவர், வாசுகியார் உருவ அமைப்புக்களை உன் சொற்களாற் கூறுக.]

1. நெடுங் காலத்துக்கு முன்னே மயிலாப்பூர் என்ற ஊரிலே திருவள்ளுவ நாயனர் என்ற பெரியார் ஒருவர் இருந்தார். அவர் தமிழிலும் வடமொழியிலும்

உள்ள நூல்கள் பலவற்றையும் கசடறக் கற்றிருந்தார். அவர் தமிழிலே திருக்குறள் என்ற நூலை இயற்றினர்.

2. நாயனர் தவத்திலும் தலைசிறந்து விளங்கினர். அவரிடம் பல சீடர்கள் படித்து வந்தனர். அக்காலத்தி லிருந்த பிரபுக்களும் அரசர்களும் அவரிடம் மரியாதை காட்டி வந்தார்கள். அவருடைய புகழ் நாடெங்கும் பரவியிருந்தது.

3. அக்காலத்தில் காவேரிப்பாக்கம் என்ற ஊரில் மார்க்கசகாயர் என்ற வேளாளர் ஒருவர் வாழ்ந்து வந்தார். அவர் சிறந்த செல்வர். அவருக்கு வாசுகி என்ற பெயருள்ள மகள் உண்டு, மார்க்கசகாயர் அம்மகளுக் குக் கல்வியை நன்ருகப் புகட்டியிருந்தார். தாம் மணக் கப்போகும் கணவரையே மகளிர் தெய்வமாகக் கொள்ள வேண்டு மென்றும், அக்கணவர் சொற்களை அப்படியே கடைப்பிடித்து ஒழுகுதலே மனைவியரின் கடமை யென்றும் அவர் கற்பித்திருந்தார். வாசுகியாரும் சிறந்த குணநலன்களைப் பெற்று மணத்திற்கு உரிய பருவத்தை அடைந்தார்.

4. மார்க்கசகாயர் பல வழிகளிலும் ஆராய்ந்து தம் மகளுக்கு ஏற்ற மணவாளர் திருவள்ளுவ நாயனரே என்று நிச்சயித்தார். இவ்வாறிருக்கையில் ஒரு சமயம் மழை யில்லாமையால் காவேரிப்பாக்கத்திலுள்ள விளை நிலங்களெல்லாம் நன்ருக விளையாமற் போயின. திருவள்ளுவ நாயனர் மனமுவந்து அவ்வூருக்கு ஒரு முறை எழுந்தருளுவாராளுல் விளைவில்லா வயல்க ளெல்லாம் செழித்து விளங்கும் என்று மார்க்கசகாய ருக்குச் சிலர் கூறினர்கள். அவ்வாறே அவர் மயிலாப் பூருக்குச் சென்று நாயனரைக் கண்டு வணங்கித் தம் ஊருக்கு ஒரு முறை வரவேண்டுமென்று விண்ணப்

பிக்க, அவரும் அவ்வாறே மனமிரங்கிச் சென்றனர். அவருடைய திருப்பாதங்கள் அவ்வூரிற் பட்டவுடனே வானம் நல்ல மழையைப் பொழிந்து வயல்களிலெல்லாம் நீரை நிரப்பிற்று.

5. அதைக் கண்டு மார்க்கசகாயர் மனமகிழ்ந்து நாயனுரை நோக்கி, "ஐய, தங்கள் வரவால் நான் அடைந்த பேற்றை என்னென்று சொல்வேன் ? என் நன்றியைத் தங்களுக்குக் காட்டும் முறையை அறியேன். எனக்கு வாசுகி என்னும் மகள் இருக்கின்ருள். அவள் சிறந்த கல்வியும் சீரிய ஒழுக்கமும் பெற்றிருக்கின்ருள். அவள் தங்கள் சொற்களைத் தவருமல் கடைப்பிடித் தொழுகும் இயல்பு அமைந்தவள். அவளைத் தங்களுக்கே திருமணம் செய்விக்க மனங்கொண்டிருக்கிறேன். அவள் மனமும் அவ்வாறே இருக்கின்றது. தாங்கள் என் வேண்டுகோளை அன்புடன் ஏற்றுக்கொள்ளவேண்டும்" என்று பிரார்த்தித்தார்.

6. அதற்கு வள்ளுவனுர், "தாங்கள் மகளின் பெருமைகளைப் பிறர் கூறவும் கேட்டிருக்கிறேன். என்ருலும், நான் கொடுக்கும் மணலை அவள் சமைத்துக் கொடுக்க வல்லவளாளுல் யான் அவளை மணம்புரியச் சம்மதிப்பேன்" என்று கூறிச் சிறிதளவு மணலை அள்ளி மார்க்கசகாயர் கையிற் கொடுத்தார்.

7. அம்மணலை அவர் ஏற்று வாசுகியாரிடம் கொடுத்து, "நங்காய், நாயனுர் என் வேண்டுகோளுக்கு இரங்கி உன்னை ஏற்றுக்கொள்ள இசைந்துள்ளார். உன் அதிர்ஷ்டத்தை மெச்சுகின்றேன் ; ஆனுல் அவர் இம் மணலைக் கொடுத்து இதனை நீ சோருக்கித் தரவேண்டும் என்று விரும்புகிருர். இதற்கு என்ன செய்யலாம்?" என்றனர்.

8. அச்சொற்களைக் கேட்ட வாசுகியார், " என் அருமைத்தந்தையே! மணாளரின் சொற்படி நடப்பதே மகளிரின் கடமை யென்று தாங்கள் எனக்குக் கற்பித்திருக்கின்றீர்களன்றோ? நான் ஏன் கவலைப்பட வேண்டும்? அம்மணலைக் கொடுங்கள்" என்று கூறித் தந்தையை வணங்கி மணலைப் பெற்றுக்கொண்டு அடுப்பை மூட்டி அதனைச் சோறாகச் சமைத்து வந்தார். நம்பிக்கை யுள்ளவர்களுக்கு அரியது எது? இதைக் கண்ட அனைவரும் மிக ஆச்சரியப்பட்டனர். வள்ளுவர் வாசுகியாரின் குணத்தை மெச்சி, அவளை நல்லதொரு நாளில் மணந்துகொண்டார். அவ்விருவரும் மயிலாப்பூருக்கு வந்து மனமொத்து இல்லறம் நடத்தினர்.

9. வள்ளுவர் தமக்கு ஒழிந்த நேரங்களில் துணிகள் நெய்து, அதனாற் கிடைக்கும் ஊதியத்தைக் கொண்டு தம் குடும்பத்தை நடத்தி வந்தார். வாசுகியம்மையார் தம் கணவரைத் தம் உயிர்போலக் காத்து வந்து அவருக்கு வேண்டிய பணிவிடைகளை மிக்க கவனமாகச் செய்து வந்தார். அவ்விருவரும் ஏழைகளுக்கு அன்னமிட்டும், விருந்தினரை வரவேற்றும், துறவிகளைப் போற்றியும்தம் இல்லறத்தைச் செவ்வையாக நடத்தி வந்தார்கள்.

10. ஒரு நாள் வள்ளுவர் உண்டுகொண்டிருந்த போது வாசுகியார் கிணற்றிலிருந்து நீர்க்குடமொன்றை இழுத்துக் கொண்டிருந்தார். அப்பொழுது நாயனார் அவசரமாகத் தம் மனைவியாரை அழைக்க, அவர் கயிற்றை அப்படியே விட்டுவிட்டு வந்து, கணவரையடைந்து அவர் ஏவினதைச் செய்து திரும்பினார். அதுவரையில் அவர் விட்டுச் சென்ற குடமும் கயிறும் அப்படியே தொங்கிக்கொண்டிருந்தன.

11. மற்ருெரு நாள் வாசுகியார் தம் கணவருக்குப் பணிவிடை செய்துகொண்டிருந்தார். அச்சமயம் வாசலில் ஒருவன் பிச்சைக்கு வந்து நின்ருன். அவன் குரலைக் கேட்ட அம்மையார், ' சற்று நேரம் பொறுக்க ' என்று சொல்லித் தாம் செய்து வந்த காரியத்திற் கவனமாக இருந்தார். பிச்சைக்காரன் சற்று நேரம் பொறுத்து மறுபடியும் கூவினுன். அதற்குள் வாசுகியும் கையொழிந்து சோற்றுடன் வாசலில் வந்தார். தன்னைற் சற்று நேரம் காக்க வைத்ததற்கு அப் பிச்சைக்காரன் அம்மையாரைக் கோபித்து அவரை உற்றுப் பார்த்தான். அதைக் கண்டு அம்மையார் அவனை நோக்கி, " கொக்கென்று நினைத்தனையோ கொங்கனவா? என்று கூறிச் சோற்றை அவனுக்கிட்டார்.

12. அச்சொற்களைக் கேட்ட பிச்சைக்காரன் திடுக்கிட்டான். ஏனென்ருல், அவன் கொங்கணம் என்ற நாட்டிலிருந்து வந்தவனே. அவன் ஒரு காட்டில் நீண்ட காலம் தங்கித் தவம் செய்து அரிய சக்திகளைப் பெற்றிருந்தான். அச் சக்திகளால் அவன் தான் நினைத்ததைச் செய்து முடிக்க வல்லவனு யிருந்தான். அவன் வரும் வழியில் ஒரு மாமரத்தடியில் தங்கியிருந்தபோது, அம்மரத்திலிருந்த ஒரு கொக்கு அவன்மீது எச்சமிட்டது. உடனே அவன் கோபத்துடன் அதனை நோக்க, அவனுடைய தவத்தின் வலிமையால் அப்பறவை எரிந்து போயிற்று. பிச்சைக்கு வந்த தன்னை வாசுகியார் காக்க வைத்ததால் அவன் கோபமடைந்து, அவருக்குத் துன்பமுண்டாக்க எண்ணியே அவரைச் சினந்து பார்த்தான். ஆனுல் அவரை ஒன்றும் செய்ய முடியவில்லை. பெருங் கற்பு வாய்ந்த அவ்வம்மையாரின் முன் அவன் தவ வலிமை பயனற்றுப் போயிற்று. அன்றியும், தான்

காட்டில் கொக்கை எரித்த வரலாற்றை அவர் எவ்வாறு உணர்ந்திருக்கக்கூடும் ? என்றெண்ணி அவன் திகைத்தான். அவர் தன்னைச் சபித்துவிட்டால் என்ன செய்வது என்றும் அவன் அஞ்சி நடுங்கினன்.

13. அவன் அம்மையாரின் கால்களில் விழுந்து, "தாயே, தங்கள் பெருமையை நான் இப்பொழுதுதான் கண்டேன். கற்புடையவர்களின் கோபத்தை ஒருவராலும் பொறுக்க முடியாது. தங்கள் மேன்மையை அறியாமல் நான் செய்த குற்றத்தை மன்னிக்க வேண்டுகிறேன்" என்று கெஞ்சினன். வாசுகியார் அவனை மன்னித்து, "மனைவிமார்களுக்குத் தம் கணவரைப் போற்றுதலே பெருந் தவமாகும் ; அதன் பெருமையை நீ இன்றேனும் அறிந்துகொள். உன் வலிமையை நினைத்துக் கருவம் கொள்ளாதே" என்று கூறி, அவனுக்கு விடை கொடுத்து அனுப்பினர்.

14. இவ்வாறு தம் கற்பால் அரிய ஆற்றல்களைப் பெற்ற அம்மையார் நீண்டகாலம் தம் கணவருடன் கூடி இல்லறம் நடத்தி வந்தார். அவ்விருவரின் பெருமையைத் தமிழ் நாட்டினர் இன்றும் பெரிதும் கொண்டாடி வருகின்றனர். அவர்கள் பெயரால் மயிலாப்பூரில் ஓர் ஆலயம் விளங்குகின்றது. தினந்தோறும் பலர் அங்குச் சென்று திருவள்ளுவ நாயனரையும், வாசுகியம்மையாரையும் வணங்கி வழிபட்டு வருகின்றனர்.

## பயிற்சிகள்

### சொல்லாட்சி

I. (1) புதிய சொற்கள் : (பாடத்தில் இவை எங்கெங்கே வந்துள்ளன ? வேறு ஒத்த சொற்களைக் கூடுமானல் அமைக்க.)

அதிருஷ்டம், ஆராய்ந்து, ஆற்றல், உரிய, ஊதியம், ஏற்ற, கடமை, கற்பு, திகைத்தான், துறவி, நங்காய், நன்றி, நாயனர், பருவம், பேறு, மணளர், மெச்சி, வரலாறு, விண்ணப்பிக்க.

(2) தொடர்மொழிகள் : (பாடத்தில் எங்கு வந்துள்ளன ? சொந்த வாக்கியங்களில் உபயோகிக்க.)

இல்லறம், எச்சமிடு, எழுந்தருள், கடைப்பிடி, கற்புவாய்ந்த, கையொழிந்து, பணிவிடை, மனங்கொள், மனமகிழ்ந்து, மனமுவந்து, மனமொத்து, வரவேற்று, விடைகொடு, விளைநிலம், வேண்டுகோள்.

(3) எழுத்துப் பிழையில்லாமல் எழுதுக :—அரிய, அவ்வாறே, உரிய, இரங்கி, நிரம்பிற்று, பரவு, பருவம், பேறு, வரலாறு.

(4) இரு பொருள்கள் கூறி வாக்கியங்களில் அமைக்க :—

நூல், நெய், கல், மகிழ், கா.

## கேள்விகள்

II. (1) திருவள்ளுவர் வாழ்ந்த ஊர் யாது ?

(2) அவர் இயற்றிய நூலின் பெயர் யாது ?

(3) நாயனர் என்ற பெயரமைந்த வேறு சிலரின் பெயர்களைக் கூறுக.

(4) வாசுகிக்கு அவர் தகப்பனர் என்ன என்ன சொல்லிக் கொடுத்தார் ?

(5) கணவன் என்ற சொல்லுக்கு இப்பாடத்தில் வந்துள்ள வேறு பெயர்கள் யாவை ?

(6) திருவள்ளுவர் தம் சொல்லை வாசுகியார் அப்படியே ஏற்கின்றனரா என்பதை எப்படிச் சோதித்தார் ?

(7) மனைவியின் கடமைகள் யாவை ?

(8) இல்லறத்தார் செய்யும் தருமங்கள் யாவை ?

(9) "கொக்கென்று நினைத்தனையோ கொங்கணவா ?" என்றதால் வாசுகியார் சொல்ல நினைத்தது என்ன ?

(10) மனைவியர்க்குத் தவமாவது யாது ?

### கட்டுரை ஆக்கம்

III. (1) பிச்சைக்காரனுக்கும் வாசுகியாருக்கும் நடந்த சம்பாஷணையை நடித்துக் காட்டுக.

(2) கற்பு என்பது என்ன? கற்புடையவர்கள் நடந்துகொள்ளும முறை, கற்புடையவர்களின் ஆற்றல்—இவற்றைக் குறித்து இரண்டிரண்டு வாக்கியங்கள் எழுதுக.

## இலக்கணம்

### வாக்கியம்

IV. (1) இரண்டாவது பத்தியில் உள்ள வாக்கியங்களை எடுத்தெழுதி, அவை ஒவ்வொன்றிலும் உள்ள எழுவாய் பயனிலைகளைக் கோடிட்டுக் காட்டுக.

### சொற்கள்

(2) நெடுங்காலத்துக்கு முன்னே மயிலாப்பூர் என்ற ஊரில் திருவள்ளுவ நாயனுர் என்ற பெரியார் ஒருவர் இருந்தார்.

இவ்வாக்கியத்திலுள்ள பெயர்ச் சொற்களை எடுத்து எழுதுக.

### குறிகள்

(3) இப்பாடத்தில் வந்துள்ள (1) வினக்குறி (2) வியப்புக்குறி (3) மேற்கோட்குறி இவை அமைந்துள்ள ஒவ்வொரு வாக்கியம் எடுத்தெழுதுக.

## 3. உணவுப் பொருள்களைப் பெருக்குக

இந்தப் பாடத்தை நீங்களே மௌனமாகப் படித்து, பின்வரும் தலைப்புக்களை உரிய பத்திகளுக்கு இடுக.

(1) உழவின் பெருமை.
(2) விவசாய வசதிகள்.
(3) நன்செய் நிலங்களின் இலக்கணம்.
(4) இந்தியா விவசாயத்துக்கு ஏற்ற நாடு.
(5) இக்காலத்து உணவுப் பஞ்சத்துக்குக் காரணங்கள்.
(6) உணவுப் பொருள்களைப் பெருக்க வழிகள்.

1. மனிதர்க்கு இன்றியமையாப் பொருள்களுள் உணவே சிறந்தது. உணவில்லாவிட்டால் உயிர் வாழ்தல் முடியாது. ஆகையால்தான், 'உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே' என்று அன்னதானத்தை நம்மவர்கள் மிகச் சிறப்பித்துக் கூறியிருக்கிறார்கள். துறவிகள், விருந்தினர், ஏழைகள் முதலியோரை உணவு கொடுத்து ஆதரித்தல் இல்வாழ்வாரின் கடமைகள் என்றும் நம் முன்னோர் கூறியிருக்கின்றனர்.



2. ஒரு நாட்டில் உணவுப் பொருள்கள் நிறைந்திருந்தால் அந் நாட்டிற்குக் கேடுகள் எளிதில் வாரா. அதனால் உணவுப் பொருள்களைப் பயிராக்கும் தொழிலான உழவை மிக்க மேன்மையுடைய தொழில் என்று பெரியோர்கள் கருதுகின்றனர். 'ஏர்ப்பின்னது உலகம்' என்று திருவள்ளுவர் கூறுகின்றார். மற்றொருவர் 'இரப்போர் சுற்றமும் புரப்போர் கொற்றமும், உழவிடை

விளைப்போர் ' என்று உழவர்களின் தொழிலால் ஏழைகளுக்கு நல்வாழ்க்கையும் மன்னர்களுக்கு வெற்றியும் உண்டாகின்றன என்று கூறுகிறார்.

3. நம் இந்தியா உழவுத் தொழிலில் சிறந்தது. உழவுக்குத் தகுந்த சமவெளிகளும், பூசாரம் மிகுந்த விளைநிலங்களும், நல்ல நீர்ப்பாய்ச்சலுக்குரிய வசதிகளும், பருவகால மழையும், உழுதற்குரிய மாட்டு வளமும், சுறுசுறுப்புள்ள மக்களும் கொண்டது. இந்தியர்களிற் பெரும்பாலோர் கிராமங்களிலேயே வாழ்ந்து விவசாயத் தொழிலிலே ஈடுபட்டவர்களாவர்.

4. சமவெளிகளிலுள்ள விளைநிலங்கள் நன்செய், புன்செய், தோட்டக்கால் என மூன்று வகைப்படும். இவற்றையன்றி மலைச் சரிவுகளிலும் காட்டுப் பூமிகளிலும் சில வகை உணவுப் பொருள்கள் உண்டாக்கப் படுகின்றன.

5. நன்செய் நிலங்களே சாகுபடி செய்வதற்கு ஏற்றவையாகும். நம் நாட்டு நன்செய் நிலங்கள் மேடுபள்ளமில்லாமல், தண்ணீர் பாய்ச்சுவதற்கும் வடிகட்டுவதற்கும் தக்கனவாம், களி, மணல் இவை கலந்து வண்டல் படிந்தனவாய், உழுதல், பரம்படித்தல், விதைத்தல், நாற்றுப் பறித்தல், நடுதல், அறுத்தல், களத்திற் சேர்த்தல், அடித்தல், கடாவிடுதல், தூற்றல், குவித்தல் முதலிய பல தொழில்களுக்கு ஏற்றனவாய் இருக்கின்றன. சிந்து, கங்கை, கோதாவரி, கிருஷ்ணா, காவேரி, தண்பொருநை (தாம்பிரபரணி) முதலிய பெரிய நதிகள் நம் தேசத்தில் ஆங்காங்குப் பாய்ந்து அவ்வவ்விடங்களுக்கு உரிய காலங்களில் நீரையும் உரத்தையும் அளிக்கின்றன. நன்செய் நிலங்கள் சேற்று நிலங்களாகவும், நீர்த் தேக்கத்துக்கு உரிய வரப்புக்களைப் பெற்றனவாக

வும் இருக்கும். இந் நிலங்களில் விளையும் பொருள் களுள் நெல்லே முக்கியமானது. நம் தேசமக்களில் பெரும்பாலோரின் உணவு அரிசி ; அதனால் நன்செய் நிலங்களே நம் நாட்டின் உயிர் என்னலாம்,

6. புன்செய் நிலங்களுக்கு நீர்ப்பாய்ச்சல் வசதி கள் அவ்வளவு நன்றாக அமைதலில்லை. குளம், துரவு, கிணறு முதலியவற்றினின்று மக்கள் கஷ்டப்பட்டு இந் நிலங்களுக்கு நீரைப் பாய்ச்சுவர். அநேக இடங்களில் புன்செய் நிலங்கள் வான மழையை நோக்கி நிற்கும். மழை பொய்த்தால் அந்நிலங்களும் பொய்த்துவிடும். சோளம், கம்பு, கேழ்வரகு முதலியன இந்நிலங்களில் சாகுபடி செய்யப்படும்.

7. வீட்டுக் கொல்லைகளிலும், ஆற்றுப் படுகைகளி லும் காய்கறி வகைகள், பழ மரங்கள் முதலியவற்றை நாம் உண்டாக்கலாம். இவை தோட்டக்கால் பயிர்கள் எனப்படும். கரும்பு, வாழை, வெற்றிலை முதலியன வும் தோட்டங்களில் உண்டாவனவே. நன்செய், புன் செய் நிலங்களில் வேலை செய்வதைவிடத் தோட்டங் களில் வேலை செய்வது அதிகக் கஷ்டமானது. ஆயினும் வேலைக்குத் தகுந்த கூலி தோட்டங்களிற் கிடைத்தலால் குடியானவர்கள் தோட்ட வேலைகளிற் சலிப்பதில்லை.

8. மலைச்சரிவுகளில் தேயிலை, காப்பி முதலியன பயிரிடப்படுகின்றன. இவை நீண்ட நாட் பயிர்கள். இவற்றில் சில வருஷங்கள் உழைத்தால் பல வருஷங் களுக்குரிய பலன் இடைவிடாமல் கிடைக்கும்,

9. நம் தேசத்தின் தட்பவெப்ப நிலைகளும், தரை யின் மேடு பள்ள அமைப்புக்களும், பூசாரத்தின் வேற்றுமைகளும் நம் நாட்டுக்கு வேண்டிய எல்லா

உணவுப் பொருள்களையும் நாமே விளைவித்துக் கொள்ளத்தக்க நிலையில் அமைந்துள்ளன. ஒரு காலத்தில் சோழநாட்டில் வேலிக்கு ஆயிரம் கலம் நெல் விளைந்தது என்றும், பதினெட்டு விதமான தானியங்கள் தமிழகத்துக் கடைத்தெருக்களில் விற்கப்பட்டன என்றும் தமிழ் நூல்கள் கூறுகின்றன.

10. இவ்வாறு செழிப்புற்றிருந்த நம் நாடு இன்றிருக்கும் நிலை என்ன? உண்ணச் சோறில்லாமல் பலர் பரிதபிக்கின்றனர் என்று கண்டும் கேட்டும் நாம் வருந்துகிறோம். இவ்வாறு நேர்ந்ததற்குக் காரணங்கள் சில உண்டு.

11. இந்தியா நாளுக்கு நாள் ஜனத்தொகையில் மிகுந்து வருகின்றது. ஐம்பது ஆண்டுகளுள் அதன் ஜனத்தொகை இரண்டு மடங்காகப் பெருகிவிட்டதென்கின்றனர். இப்படி மக்கள் பெருகி வரவர நாட்டின் விளைபொருள்களும் மிகுந்து வரவேண்டுமல்லவா? தரிசாகக் கிடந்த நிலங்களைச் சாகுபடிக்குக் கொண்டுவந்தால் இத்தொல்லை தீருமல்லவா? இதை மக்கள் செய்யவில்லை, அன்றியும் உலகத்தில் விஞ்ஞான அறிவின் முன்னேற்றத்தால் எருவின் தன்மைகள், உழவுக்குரிய கருவிகள், சாகுபடி முறைகள் முதலியவனவெல்லாம் பிறநாடுகளில் மிக நன்றாக மேலோங்கியிருக்க நம் நாட்டிலோ பழைய கருவிகள், எருக்கள், பழைய முறைகள் முதலியனவே கையாளப்பட்டு வருகின்றன. விவசாயத்துக்கு மிகவும் பயன்படுபவை மாடுகள். அம்மாடுகளைச் செம்மையான முறையில் நாம் வைத்துக் கொள்வதில்லை. மிக்க தாழ்வுடைய மாடுகளே குடியானவர்களிடம் இருக்கின்றன. இவற்றோடு, நெல் வயல்கள் முதலியவற்றில் பாடுபடுவதை

விடப் பருத்தி, எண்ணெய் வித்து முதலியவற்றில் உழைத்தும், கூலி வேலை செய்தும், ஆலைகள் முதலிய தொழிற்சாலைகளில் உத்தியோகங்கள் பெற்றும் பிழைப்பது அதிக லாபத்தைத் தருகிறதென்று நிலக்காரர்கள் தம் நிலங்களைக் கவனியாமல் விட்டு வருகின்றனர். இவைபோன்ற காரணங்களால் நாட்டில் விளைபொருள்கள் தேவைக்குத் தக்கவண்ணம் உண்டாகவில்லை. அதனால், பிற நாடுகளிலிருந்தும் நாம் நம் உணவுப் பொருள்களைப் பெற வேண்டியவர்களானோம்,

*12.* சாதாரண காலங்களில் அயல் நாடுகளிலிருந்து பொருள்கள் வருதல் எளிதாகலாம். போர் முதலிய காரணங்களால் போக்குவரத்துக்கள் தடைப்பட்டால் உணவுக்கு வழியில்லாமல் நாடு தவிக்க வேண்டியதுதான். ஆகையால், எக்காலத்திலும் நாட்டில் உணவுப் பொருள்கள் குறைவில்லாமற் செய்து கொள்ளவேண்டியது நமது கடமை. இதற்காகவே இப்பொழுது எங்கும் '**உணவுப் பொருள்களைப் பெருக்குக**' என்ற முழக்கம் எழும்பி வருகிறது.

13. இந்தச் சமயத்தைக் கைவிடாமல் குடியானவர்கள் விழிப்புடன் தங்கள் நிலங்களைச் செம்மையாய்ப் பண்படுத்தி நல்ல விதைகளை விதைத்து, சாஸ்திரியமான உரங்களை வாங்கி நிலங்களில் இட்டு சாகுபடி செய்தல் வேண்டும். நல்ல கலப்பைகளையும் நல்ல மாடுகளையும் உபயோகிக்க வேண்டும், விளைநிலங்களை வீணாக கிடக்க விடாமல் பயிர்களைக் காலத்துக்குத் தக்கபடி மாற்றி வருஷம் முழுமையும் வயல்களிற் பச்சை காணும்படியாகச் செய்தல் வேண்டும். தரிசு நிலங்களை யெல்லாம் சாகுபடிக்குக் கொண்டுவர வேண்டும். தத்தமக்கு வேண்டிய காய் கறிகளை

யும் பழங்களையும் தாமே பயிரிட்டுப் பெற முயல வேண்டும். இவ்வாறெல்லாம் முயன்றால் நாட்டில் பஞ்சம் தலைகாட்டாது. 'உழைப்பின் வாரா உறுதிகள் உளவோ ?' என்று பெரியோர்கள் சொன்னதை நம்பி உழைத்து வந்தால் நமக்கு அரியதென்பது ஒன்றுமே யிராது.

## பயிற்சிகள்

### சொல்லாட்சி

I. (1) **புதிய சொற்கள் :**—இரவலர், ஈடுபடு, உறுதி, உரம், கொற்றம், சாகுபடி, சாஸ்திரியமான, சுற்றம், தரிசு, பரம் படித்தல், வசதி, வடிகட்டு, விஞ்ஞானம்.

(2) **தொடர் மொழி :**—அன்னதானம், ஆங்காங்கு, இடைவிடாமல், இன்றியமையா, கடாவிடுதல், பருவகாலம், பூசாரம், மலைச்சரிவு, தட்பவெப்ப நிலை.

(3) **இரு பொருள் கூறுக :**—முயல், மலை, துறவு, நாடு, கடா, வருஷம்.

(4) **வேற்றுமை கூறுக:**— எழுத்துப் பிழையில்லாமல் எழுதுக:- உழவு—உளவு. ஏர்—ஏறு. நாலு—நாற்று. நிலம்—நீலம். புன்—புண். மலை—மழை. வடி—வட்டி. விளை—விலை. வேலை—வேளை.

### கேள்விகள்

II. (1) அன்னதானம் ஏன் சிறந்தது ?

(2) உழவர்கள் தொழிலால் மன்னர்களுக்கு என்ன விளையும் ?

(3) 'இரவலர் சுற்றம்' என்றால் பொருள் என்ன ?

(4) நல்ல சாகுபடிக்குச் சாதனங்கள் யாவை ?

(5) விளைநிலங்களை மூன்று வகையாகப் பிரித்துக் கூறு.

(6) நன்செய் நிலங்களின் தன்மைகள் யாவை ?

(7) புன்செய்ப் பயிர்களில் சிலவற்றைக் கூறுக ?

(8) தோட்டவேலைகளில் குடியானவர்கள் ஏன் சலிப்பதில்லை ?

(9) 'சோழநாடு சோறுடைத்து' என்ற பழமொழி எவ்வாறு உண்மையாகும் ?

(10) விளைபொருள்களை அதிகப்படுத்தும் முறைகள் யாவை ?

### கட்டுரை

III. (1) இப்பாடத்தில் அமைந்துள்ள பழமொழிகளைப் பொறுக்கிப் பெரிய எழுத்துக்களில் எழுதி காட்டுக.

(2) உன் கிராம மக்களுக்கு 'உணவுப் பொருள்களைப் பெருக்குக' என்ற பொருள்பற்றி ஓர் உபந்யாசம் செய்வதற்கு ஒரு கட்டுரை எழுதுக.

(3) உன் ஊரிலுள்ள உணவுப் பொருள்களின் நிலையைப் பற்றி உன் பாடசாலைப் பத்திரிகைக்கு ஒரு கட்டுரை எழுதுக.

## இலக்கணம்

### வாக்கியம்

IV. 1. பின் வரும் வாக்கியங்களில் எழுவாய் பயனிலைகள் திணை, பால், எண், இடம் இவற்றில் ஒத்திருக்கின்றனவா ?

(1) நம் நாட்டில் சுறுசுறுப்புள்ள மக்கள் மிகுதியாக இருக்கின்றனர்.

(2) நன்செய் நிலங்களே சாகுபடிக்கு ஏற்றதாகும்.

(3) இந்தியாவின் ஜனத்தொகை இரண்டு மடங்காகப் பெருகி விட்டது.

(4) உழைப்பின் வாரா உறுதிகள் உளவோ ?

### சொல்

2. இப்பாடத்தின் முதல் பத்தியிலுள்ள பெயர்ச் சொற்களை எடுத்தெழுதி அவற்றின் திணை, எண் இவற்றைக் குறிக்க.

---

# 4. ஜீவகன் பிறப்பு

[தமிழிலுள்ள பெரிய காவியங்களுள் ஜீவகசிந்தாமணி என்பது ஒன்று. அதனைத் திருத்தக்கதேவர் என்ற ஜைன முனிவர் இயற்றினர். ஜீவகன் என்ற பெரியோனைப் பற்றி அந்நூல் கூறுகிறது.

இப்பாடத்தில் ஜீவகனின் பிறப்பு வரலாறு கூறப்படுகிறது. இப்பாடத்தால் சில சிறந்த நீதிகள் புலப்படும்.

இக்கதையை உதடசைக்காமல் படியுங்கள். படிக்கும் போது என்ன என்ன நீதிகள் எவ்வெப்பகுதிகளால் வெளியாகும் என்பதைக் குறியுங்கள்.

இந்தப் பாடத்தில் அழுகை, மகிழ்ச்சி இவைகளில் ஒவ்வொன்றும் எவ்வெப்பத்திகளில் அதிகமாக விளங்குகிறது ?]

1. முன்னொரு காலத்தில் ஏமாங்கதம் என்ற நாட்டிலே இராசமாபுரம் என்ற நகரிலே சச்சந்தன் என்னும் அரசன் செங்கோல் செலுத்தி வந்தான். அவனுடைய மனைவியின் பெயர் விசயை. அவள் மிக்க அழகுவாய்ந்தவளா யிருந்தாள்.

2. சச்சந்தனுக்குக் கட்டியங்காரன் என்ற மந்திரியொருவன் இருந்தான். அவன் மிக்க கல்வித் தேர்ச்சி பெற்றவனுயிருந்தாலும், தீய குணம் மிகவும் படைத்தவனு யிருந்தான். எப்படியாவது அரசனைக் கொன்று தான் சிங்காதனம் ஏறவேண்டுமென்று அவன் விரும்பினன். அரசனே மந்திரியின் கெட்ட எண்ணத்தை அறியாதவனுய் அவனை முற்றிலும் நம்பியிருந்தான். அவனிடமே அரசாட்சியையும் ஒப்புவித்துவிட்டு அரசன் விசயையுடன் காலங்கழித்து வந்தான்.

3. இப்படியிருக்குங் காலத்தில் ஒரு நாள் தச்சன் ஒருவன் அரசன் முன் வந்து, தான் செய்துவைத்திருந்த

ஒரு மயிற்பொறியைக் காட்டினான். உண்மையான மயிலைப் போலவே அது தோன்றிற்று. அதை வானத்திற் பறக்கச் செய்யவும் கீழே இறங்கச் செய்யவும் அதனில் விசைகள் இருந்தன. அத்தச்சன் அதன்மேல் தான் ஏறிப் பறந்து காட்டிக் கீழே இறங்கினான். அதைக் கண்ட அரசனும் இராணியும் மிக்க விருப்பத்துடன் அதனை விலை கொடுத்து வாங்கினார்கள்; அவர்கள் பல முறை அதனில் ஏறிச் சென்றும் களித்து வந்தார்கள்.



4. இப்படியிருக்குங் காலத்தில் கட்டியங்காரன் திடீரென அரசன்மீது போருக்கு எழுந்தான். படை வீரர்களிற் பலரை அவன் தன் பக்கம் சேர்த்துக் கொண்டு விட்டதால் அரசன் பலமற்றுத் திகைத்தான். அச்சமயம் விசயை கருவுற்றிருந்ததால் அவளை எப்படியாவது காப்பாற்றவேண்டுமென்று அரசன் எண்ணி, அவளை மயிற்பொறியில் ஏற்றி எங்கேயாவது சென்று

தப்பிக் கொள்ளுமாறு சொல்லிவிட்டுத் தான் கட்டியங் காரனேடு போர் புரியச் சென்முன்.

5. போரில் கட்டியங்காரன் இலகுவில் அரசனைக் கொன்று வீழ்த்தினன். அவன் தன் வெற்றியாலுண்டான மகிழ்ச்சியை நகரத்தாருக்கு அறிவிக்கத் தன் முரசை முழக்கினன். வானத்திலே சென்றுகொண்டிருந்த விசயையின் காதுகளில் முரசொலி விழுந்தது. தன் கணவன் இறந்தான் என்றும், பாதகனுன கட்டியங்காரன் நாட்டிற்கு அரசனுகிவிட்டானென்றும் அவள் ஊகித்தறிந்துகொண்டாள். அவளுக்குத் துக்கம் தலைக்கேறிற்று. அவள் பொறியைச் செலுத்த முடியாமல் அதன் மேலே சாய்ந்து விட்டாள். அப்பொறி ஒரு சுடுகாட்டில் வந்திறங்கிற்று.

6. அங்கே விசயை தன் விதியை நினைத்து மிகவும் வருந்தினள். அரண்மனையில் பல தோழியர்களுடனும் வேலைக்காரிகளுடனும் வாழ்ந்துவந்த அரசி தன்னந்தனியே ஒரு சுடுகாட்டில் நின்ருல், அவள் மனம் என்ன பாடுபடும்! அக்காட்டில் வசித்து வந்த ஒரு தெய்வம் அவள்மீது இரக்கம் கொண்டு, அவள் தோழியைப் போல் வேடம் தரித்து அவள் முன் தோன்றி, "அம்மே, அரசன் இறந்த பிறகு நாங்களெல்லோரும் அரண்மனையிலிருந்து தப்பி வெளியேறினேம். நான் தற்செயலாய் இந்த வழியே வந்து தங்களைக் கண்டேன். தாங்கள் இனிக் கவலை கொள்ளவேண்டாம்" என்று சொல்லித் தேற்றிற்று.

7. விசயையும் ஒருவாறு மனந்தேறினள். அச் சமயம் அவளுக்கு அவ்விடத்தில் ஓர் ஆண் குழந்தை பிறந்தது. அதனுல் அவள் மிகவும் நொந்து களைப்புற்றிருந்தாள். அவளை அத்தெய்வம் நோக்கி, "தாயே, இவ்

வழங்கிய குழந்தையை மன்னர் பார்க்கக் கொடுத்து வைக்கவில்லையே! என்றாலும் நாம் வருந்தவேண்டா. கடவுள் நம்மைக் காப்பாற்றுவார். இக்குழந்தையுடன் நாம் இங்கே இருத்தல் தகாது. கட்டியங்காரனின் ஆட்கள் நம்மைத்தேடி வருவார்கள். அவர்கள் இக் குழந்தையைக் கண்டாற் கொன்று விடுவார்கள். அதோ தூரத்தில் கந்துக்கடன் என்ற வணிகன் தன் மரித்த



குழந்தையைப் புதைக்க இவ்விடத்தை நோக்கி வருகிறான். அவன் நம் அரசரின் அரிய நண்பன். அவன் காணும்படியாக இக் குழந்தையைக் கிடத்திவிட்டு நாம் ஒரு புறத்தில் ஒளிந்திருப்போம். இதனருகில் தாங்கள் அரசர் முத்திரை பொறித்த மோதிரத்தைப் போட்டு வையுங்கள். அதன் மூலமாய் அவன் இக்குழந்தை இறைவனின் குழந்தை யென்றறிந்து கொண்டு மிகவும் ஜாக்கிரதையாய் வளர்த்து வருவான். கடவுளால் நமக்கு நல்ல காலம் பிறக்கும்" என்று கூறிற்று.

8. அச்சொற்களைக் கேட்டு அரசி பெரிதும் வருந்தினள். அவள் குழந்தையை நோக்கி, "ஐயோ, நானும் மன்னரும் அரண்மனையில் வாழுங்காலத்தில் நீ பிறந்திருந்தால், உன் பிறப்பை உலகம் எவ்வாறு கொண்டாடும்? இங்கே அநாதையாய் நீ மண்ணிற் கிடந்து பரிதவிக்க நேர்ந்ததே! உன்னையும் நான் இப்பொழுது கைவிடவேண்டுமே! ஐயோ! என் விதிதான் என்ன? உன்னை நான் இனி இப்பொழுது காண்பேனோ? ஈசா!" என்று கண்ணீர்விட்டு அழுதாள். அச்சமயத்தில் அக்குழந்தை தும்மிற்று. காட்டில் வாழ்ந்த தெய்வங்கள், 'நீ வாழ்வாயாக' என்று பொருள் படும்படி, "ஜீவ!" என்று வாழ்த்தின. அவ்வாழ்த்தொலி விசயையின் செவிகளில் விழுந்தது; அவள், "குழந்தாய்! இவ்வாழ்த்தொலியே உன் பெயருக்குக் காரணமாகட்டும். நீ ஜீவகன் என்று பெயர் பெறுவாய்" என்றனள். இதற்குள் கந்துக்கடன் என்ற வணிகன் சுடுகாட்டின் அருகில் வந்ததைத் தோழியுருவம் கொண்ட தெய்வம் கண்டு, "அம்மா, இனிக்காலம் தாழ்த்தலாகாது. குழந்தையைக் கிடத்திவிட்டு நாம் அகன்று நிற்போம்" என்றது. விசையையும் கண்ணீருங் கம்பலையுமாய் அதனை எடுத்து உச்சி மோந்து முத்தமிட்டுக் கீழே கிடத்தி அதனருகில் அரசனின் மோதிரத்தை வைத்துவிட்டுத் தெய்வங்களை வேண்டிக் கொண்டே தன் தோழியுடன் ஒரு மரத்தினடியில் பதுங்கிக் கொண்டாள்.

9. இறந்த தன் குழந்தையைப் புதைக்க வந்த வணிகன் மிகவும் அழகான உருவத்துடன் ஒரு பச்சிளங் குழவி அங்குத் தனியே கிடப்பதைக் கண்டு, அதை அன்போடு எடுத்து மார்பில் அணைத்துக்கொண்

டான். அதன் அருகிற் கிடந்த பெரிய மோதிரத்தைக் கண்டு, "ஆ! இக்குழந்தை என் அரசனுடைய குழந்தை யாகவன்றோ காண்கின்றது! என்ன ஆச்சரியம்! நிறைந்த கருப்பத்துடனிருந்த அரசி மயிற்பொறியில் ஏறித் தப்பிப்போனுள் என்றல்லவோ ஊரார் சொல் லிக் கொண்டிருக்கின்றனர்? அவள் அக்குழந்தையைப் பெற்றெடுத்துத் தன் உயிரை விட்டுவிட்டாளோ? எல்லாம் தெய்வச் செயலே! என் குழந்தை மரிக்கவும் இக்குழந்தை எனக்குக் கிடைக்கவும் நேர்ந்தது பெரு வியப்பன்றோ? அரசன் இறக்கவும் இக்குழந்தை பிறக்க வும் நேர்ந்ததே! கடவுள் செயலே யாரே அறிவார்! நான் இக்குழந்தையை மிகவும் ஜாக்கிரதையாக வளர்த் தல்வேண்டும். இச்செய்தியைக் கட்டியங்காரன் அறிந் தால், என்ன விளையுமோ?" என்று சடுதியில் தன் குழந்தையைப் புதைத்துவிட்டு ஜீவகனைத் தூக்கிக் கொண்டு விரைவில் வீடு போய்ச் சேர்ந்தான்.

10. அங்கே அவன் தன் மனைவியைக் கண்டு, "பெண்ணே! உன் மகன் மரிக்கவில்லை; காட்டில் ஒரு தெய்வம் தோன்றி உன் குழந்தையைத் தன் கைகளால் தொட்டு ஆசிர்வதிக்க, அது முன்னிலும் அதிக அழகு டன் உயிர்பெற்று எழுந்தது" என்று சொல்லி அவ ளிடம் அதனைக் கொடுத்தான். அவளும் பேராவலுடன் அக்குழந்தையை ஏற்று அன்புடன் வளர்ப்பாளாயினுள்.

11. இப்பால், விசயை குழந்தை நல்ல இடத்திற் சென்று விட்டதைக்கண்டு சற்று ஆறுதலடைந்தாள். அவளருகில் நின்ற தெய்வம் அவளை நோக்கி. "அன் னையே, இனி நீங்கள் குழந்தையைப்பற்றிக் கவலைப்பட வேண்டா. நாம் இனி இங்குத் தங்குதல்கூடாது. இவ் விடத்துக்கு அப்பால் சிறிது தூரத்தில், ஒரு பெருங்காடு

இருக்கிறது. நாம் அங்குச் சென்று, குழந்தையின் நலத்தைக் குறித்துத் தவம் புரிவோம். நான் அடிக்கடி நகரத்துக்குள் சென்று குழந்தை வளர்ந்து வருவதைப் பார்த்து வருவேன்" என்று கூறி அவளை அழைத்துக் கொண்டு அப்பால் அகன்றது.

## பயிற்சிகள்

### சொல்லாட்சி

I. (1) சொற்கள்: அநாதை, ஆசீர்வதிக்க, ஊகித்தாள், கருவுற்றிருந்தாள், தவம், பொறித்த, முத்திரை.
அரசன் என்ற சொல்லுக்குப் பதிலாய் இப்பாடத்தில் வந்துள்ள வேறு சொற்கள் யாவை?

(2) தொடர் மொழிகள்: (இவற்றை வாக்கியங்களில் அமைத்துக் காட்டுக.) கண்ணீருங் கம்பலையுமாய், காலந் தாழ்த்தல், தற்செயலாய், தன்னந்தனியே, தெய்வச் செயல்.

(3) வாக்கியங்களில் உபயோகிக்க: இறங்கு; இறக்கு. ஏறு; ஏற்று. முழங்கு; முழக்கு. வளர்ந்து; வளர்த்து.

(4) பொருள் வேற்றுமை காட்டி, எழுத்துப் பிழையில்லாமல் எழுதுக:—இர, இற; மரி, மறி; பொரி, பொறி; வால், வாள்.

### கேள்விகள்

II. (1) அரசன் தன் மதியீனத்தால் அரசிழந்தான். இஃது எப்படி?
(2) அரசி எவ்வாறு அரண்மனையிலிருந்து தப்பினாள்?
(3) 'அகதிக்குத் தெய்வமே துணை'—இஃது எப்பகுதியால் விளங்குகிறது?
(4) கந்துக்கடன் யாவன்? அவன் ஏன் சுடுகாட்டுக்கு வந்தான்?
(5) மோதிரத்தால் கந்துக்கடன் என்ன உணர்ந்து கொண்டான்?
(6) இராணி குழந்தையை நோக்கி என்ன கூறினாள்?
(7) குழந்தைக்கு ஜீவகன் என்ற பெயர் எப்படி உண்டாயிற்று?
(8) கந்துக்கடன் ராஜ பக்தியுள்ளவன் என்பது எப்படித் தெரிய வருகிறது?

(9) அவன் தன் மனைவியிடம் சென்று யாது கூறினன் ?
(10) குழந்தை பிறந்தபின் விசயை எங்குச் சென்றாள் ?

### கட்டுரை

III. (1) அரசனை விட்டு அரசி பிரிந்தபோது அவர்களுக்கிடையே என்ன சம்பாஷணை நடந்திருக்கும் ? எழுதுங்கள்.

(2) குழந்தையைக் கண்டவுடன் விசயை தன் கணவனை நினைத்து அவனை நோக்கிக் கூறியனவாகச் சில வாக்கியங்கள் எழுதுக.

## இலக்கணம்

### வாக்கியம்

IV. (1) விசயை அதனை எடுத்து உச்சிமோந்து கீழே கிடத்தினள். இதனை மூன்று சிறு வாக்கியங்களாக அமைக்க.

(2) பின் வரும் வாக்கியங்களிலுள்ள எழுவாய், பயனிலை, செயப்படுபொருள்களை எடுத்து எழுதுக :—

(i) கடவுள் செயலை யாரே அறிவர் ?
(ii) நான் குழந்தை வளர்ந்து வருவதைப் பார்த்து வருவேன்.
(iii) தாங்கள் இனிக் கவலை கொள்ளவேண்டா.

### சொல்

பெயர்ச் சொற்களைக் கண்டறிய நீங்கள் அறிந்திருக்கிறீர்கள். ஆனல் ஒவ்வொரு பெயர்ச் சொல்லும் எந்த வகையைச் சார்ந்தது என்பதை நீங்கள் தெரிந்து கொள்ளவேண்டும்.

அரசன், மயில் பொறி—இவை பொருட்பெயர்கள்.
நாடு, நகரம், சுடுகாடு—இவை இடப்பெயர்கள்,
நாள், மாதம், வருஷம்—இவை காலப்பெயர்கள்.
கிளை, கை, தோகை—இவை சினை (உறுப்பு)ப் பெயர்கள்.
அழகு, உண்மை, அருமை—இவை பண்பு (குண)ப் பெயர்கள்
வாழ்த்தல், வியப்பு, கொடை—இவை தொழிற்பெயர்கள்.

பின்வரும் பெயர்களுள் ஒவ்வொன்றும் எப்பகுதியைச் சாரும் ?
தெரு, நேற்று, கண், திகைப்பு, ஓட்டம், வீரம்.

---

## 5. ஒரு நரியின் தந்திரம்

[இந்தப் பாடல்களில் ஒரு நரி சிங்கம் முதலிய பிராணிகளைத் தன் தந்திரத்தால் ஏமாற்றிய கதை சொல்லப்படுகிறது.

இதை நீங்களே மனத்துள் படித்துக் கதையைத் தெரிந்துகொள்ளுங்கள்.

இப்பாடலில் நரி யார் யாரை, 'அரசனே, மாதுலா.' என்று அழைத்தது ?

அது யாது கூறி ஒவ்வொருவரையும் ஏமாற்றியது என்று சொல்லுங்கள்.]



இறந்தயானையைத்தின்னவோர்
இகலன் (அங்கு) எய்தச்
சிறந்தசிங்கமொன்றுஅடைந்து,
'நீ யார்?' என, "சிறியேன்
மறம்கொள் நீ கொன்ற யானை
காத்திங்கு வந்தேன் ; [யைக்
அறந்தவாச் சிங்க அரசனே!"
என்றதந் நரியே. 1

'ஈது நான் கொன்றதன்று ; நீ
கொள்க,' என்(று) இசைத்துப்
போத, மற்றொரு புலி வந்து,
'யார்?' என, நரியார்,
'மாதுலா ! இதை மடித்தகே
சரியொன் றங்(கு) உளதால்,
'ஓது வேங்கையிங்(கு) உறில் எனக்(கு)
உரை,' என ஒளித்தே. 2



என்ன காரணம் அதற்கெனில்,
வேங்கைஒன்(று) எய்தி [தான்
முன்னோர் யானையைக் கொன்று
மூழ்கப்போம் காலைத்
துன்னி எச்சிலாக் கிய(து)' எனச்
சொல்லலும், வேங்கை
பின்னர் எண்ணியே, ' மருமக
னே! நினால் பிழைத்தேன் !' 3



என்று சொல்லிமுன் ஓடிய(து);
இதன்பின்ஓர் குரங்கு
துன்ற, நோக்கி, ' இக் கரியினைத்
துண்ணெனக் கிழித்துத்
தின்று போ,' எனக் குரங்கதைக்
கிழித்தது ; சிங்கம்
நன்று வந்த(து)!' என்றுரைத்திட
நடுங்கிஓ டியதே. 4



பக்கு வம்செய்து குரங்குபோ
தலும், நரி பார்த்துத்
' தக்க(து),' என்றுணப் போம்
ஓருநரி சார்ந்து [பொழு(து)
கைக்கொ ளற்கெண, அதை
ஓட்டியே கடிதில் [யடித்(து)
தொக்க வெம்பசி தொலைந்திட
உண்டது நெடுநாள்.

—பஞ்சதந்திரப் பாடல்

## குறிப்புக்கள்

1. இகலன் - நரி. எய்த - அடைய. மறம் - வீரம். அறம் தவா சிங்க அரசனே. தவா - தவறுத.

2. இசைத்து - சொல்லி. போத - போக. மாதுலா - மாமா. மடித்த - கொன்ற. கேசரி - சிங்கம். ஒன்று அங்கு உளது ஆல். வேங்கை - புலி. உறில் - வருமானல்.

3. துன்னி - நெருங்கி.

4. துன்ற - நெருங்க. கரி - யானை.

5. கைக்கொளற்கு - பற்றிக்கொள்வதற்கு. கடிதில் - சீக்கிரமாக. தொக்க - மிகுந்த.

## கேள்விகள்

1. நரி சிங்கத்தினிடம் கூறியது என்ன ?

2. அறம் தவாச் சிங்கமே என்று நரி என் கூறியிருக்க வேண்டும் ?

3. சிங்கம் தான் அடித்த பிராணியையே தின்னும் என்பது எப்படி அறியலாகும் ?

4. இரண்டாவது செய்யுளில் 'என ஒளித்தே' என்பது அடுத்த செய்யுளிலுள்ள 'சொல்லும்' என்பதோடு பொருந்தும். நரி எதை ஒளித்துச் சொன்னது ?

5. என்ன காரணம் அதற்கெனில்—எதற்கு ? காரணம் என்ன?

6. 'வேங்கை பின்னர் எண்ணியே'—வேங்கை எண்ணியது யாதாய் இருக்கலாம் ?

7. 'சிங்கம் நன்று வந்தது' இப்படிக் கூறியது எது ?

8. பணிவு, அச்சமுறுத்தல், சண்டையிடல் - இம்முறைகளை யார் யாரிடம் நரி காட்டிற்று ?

## சொல்லாட்சி

1. இகலன், வேங்கை, கரி - இவற்றின் பொருள்கள் யாவை ?

2. எய்த, அடைய, உற, துன்ற, போத, சார - இவை ஒரே பொருளுடையன. இப்பாடலில் இச் சொற்கள் எவ்வாறு வந்துள்ளன ?

3. சொல்—இவ்வார்த்தையின் பொருளையே கொடுக்கும் வேறு சொற்கள் இப்பாடலில் என்ன வந்துள்ளன ?

### கட்டுரை

1. இக்கதையை ஒரு சிறு நாடகமாக வசனத்தில் எழுதி நடித்துக் காட்டுக.

2. நரியின் சாமர்த்தியத்தைப்பற்றி ஐந்து வாக்கியங்கள் எழுதுக.

3. இப்பாடல் பஞ்சதந்திரம் என்ற நூலிலுள்ளது. பஞ்சதந்திரம் வசனத்திலும் செய்யுளிலும் உண்டு. இப்புத்தகத்தைப் பெற்றுக் கதைகளைப் படியுங்கள்.

## இலக்கணம்

### வாக்கியங்கள்

1. பின்வரும் வாக்கியங்களை வசன முறையில் அமைக்க.

(1) என்றதங்கரியே.

(2) நரி உண்டது நெடுநாள்.

2. பின்வரும் வாக்கியத்தை மிகச் சிறு வாக்கியங்களாகப் பிரித்தெழுதுக.

நரி பார்த்துத் தக்கதென்றுணப்போம்பொழுது, ஒரு நரி சார்ந்து கைக்கொளற்கென, அதையடித்தோட்டியே கடிதில் தொக்க வெம்பசி தொலைந்திட நெடுநாள் உண்டது.

நீ கொன்ற யானை.

இது வாக்கியமாகுமா ? ஏன் ?

இதனை,

'நீ யானையைக் கொன்றாய் அல்லது நீ கொன்ற யானையை நான் காத்தேன்' என்று கூறினால் வாக்கியம் முடிவடையும்.

பின் வருவனவற்றை முடிந்த வாக்கியங்களாக மாற்று.

(1) சிங்கமொன்று அடைந்து

(2) வேங்கையொன்று எய்தி

(3) இக்கரியினைத் தின்னெனக் கிழித்து

இப்பாடலின் முதற் செய்யுளிலுள்ள பெயர்ச் சொற்களை ஒன்றன் பின்னொன்றாக எழுதி, ஒவ்வொன்றிற்கும் திணை, பால், எண் இவற்றைக் குறிக்க.

### உதாரணம்

| பெயர் | திணை | பால் | எண் |
|---|---|---|---|
| யானை | அஃறிணை | ஒன்றன்பால் | ஒருமை |



## 6. மலைகள்

[இப்பாடம் ஆழ்ந்து படிக்கத் தக்கது. இதனை ஊன்றிப் படித்துப் பின்வரும் தலைப்புக்களை உரிய பத்திகளுக்கு இடுக.

1. மலைக்குரிய பிற பெயர்கள்.
2. ஆசிரியருக்கும் மலைக்கும் உள்ள ஒற்றுமைகள்.
3. மலைக் காட்சி.
4. மலை விலங்குகள்.
5. மலைமக்கள் வாழ்க்கை.
6. மலைப் பொருள்கள்.

இப்பாடத்தில் காணப்படும் படத்தையாவது வேறு ஏதேனும் ஒரு மலைப் படத்தையாவது ஊன்றிப் பார்த்து இப் பாடத்திற் சொல்லப்படாத விஷயங்கள் அப்படத்தால் அறியப்படுவன இவை என்று குறிக்க.]

1. மக்கள் வாழும் இவ்வுலகத்திற்கு நானிலம் என்ற ஒரு பெயருண்டு. அந்நான்கு நிலங்கள் மலை, காடு, நாடு, கடல் ஆகியனவும் இவற்றை ஒட்டியுள்ளனவுமாகும். இவற்றுள் இயற்கை நலங்கள் மிகுதியா

கப் பொருந்தி விளங்கும் இடம் மலை நிலமேயாகும். மிகப் பழைய காலத்தில் மக்கள் வாழ்ந்து வந்த இடங்களும் மலைகளேயாகும்.

2. நம் இந்தியாவில் மலைகள் மிக அதிகம். வடக்கேயுள்ள இமாலயம் உலகத்திலுள்ள மலைகளுள் உயர்ந்தது என்பர். (கிழக்கிலும், மேற்கிலும், தெற்கிலும்) நம் சென்னை ராஜதானியிலும் பல பெரிய மலைகள் இருக்கின்றன.

3. மலை என்ற சொல்லுக்கு வலிமையுடையது என்பது பொருள். மலையைக் குறிக்கத் தமிழில் பல சொற்கள் உண்டு. மலை மிகவும் ஓங்கி நிற்பதால் அதனைச் சிலர் **ஓங்கல்** என்பர்; ஒரு நாட்டின் குறுக்கே படர்ந்து நிற்பதாற் சிலர் அதனை **விலங்கல்** என்பர்; தூரத்திலிருப்பவருக்கும் அது பிறங்கி (விளங்கி) நிற்பதால் **பிறங்கல்** என்பர் சிலர். மலையின் பக்கத்திலிருந்து உரக்கக் கூவினுல் எதிரொலி உண்டாவதை உங்களிற் சிலர் கவனித்திருக்கலாம். அக்காரணத்தால் சிலர் அதனைச் **சிலம்பு** என்பர். சிலம்புதல் என்பதற்கு ஒலித்தல் என்பது பொருளாகும். வரை என்ற சொல்லுக்கு மூங்கில் என்று அருத்தம். மூங்கில்கள் வளர்வதற்கு இடமாயிருப்பதால் மலைக்கு **வரை** என்ற ஒரு பெயருமுண்டு. மலைகள் ஒன்ருேடொன்று அடுக்கப்பட்டிருப்பதால் **அடுக்கல்** என்றும், அவை தொடர்ந்திருந்தால் **தொடர்ச்சி** என்றும் சிலர் கூறுவர். குறுகிய மலையைக் **குன்று** என்பர். மலைப் பக்கத்துக்குச் சாரல் என்பது பெயராகும்.

4. சிறந்த குணங்களமைந்த ஆசிரியரைப் புலவர்கள் மலைக்கு ஒப்பிட்டுக் கூறுவார்கள். மலையின் அளவை எவராலும் இவ்வளவென்று சொல்லுதல் இய

லாது. அதைப்போல ஆசிரியரின் கல்விப் பெருக்கும் அளவற்றதாய் இருக்கும். மலையில் பொன், முத்து, மணி, தந்தம், சந்தனம் போன்ற பல அருமையான பொருள்கள் கிடைக்கலாகும். நல்லாசிரியரிடம் அடக்கம், பொறுமை, அன்பு, அருள் முதலிய பண்புகள் நிறைய அமைந்து கிடக்கும். மலையை அசைத்தல் எவராலும் ஆகாது. இராவணன் ஒரு சமயம் கயிலை மலையை அசைத்தான் என்பர். ஆனால் இது சாமானியர்களால் செய்யப்படும் காரியமன்று ; அவ்வண்ணமே, நன்றாகக் கற்ற ஆசிரியரை எவரும் வெல்வது முடியாது. மலை வெகு தூரத்திலிருப்பவர்களாலும் காணப்படும் தோற்றம் வாய்ந்தது. சிறந்த ஆசிரியர்களின் புகழும் நாடெங்கும் பரந்திருக்கும். இன்னும், மழை பெய்யாமல் நாடெல்லாம் வறண்டு கிடக்கும் காலத்திலும் மலைகள் ஆங்குள்ள சுனைகளாலும் ஊற்றுக்களாலும் அருவிகளாலும் அவ்விடங்களுக்கு வளமையை ஊட்டிக் கொண்டிருக்கும் ; அவ்வாறே நாட்டில் வறுமை, அறிவீனம் பஞ்சம் முதலிய கொடுமைகள் ஏற்பட்டு மக்கள் தங்கள் நிலைகளில் தடுமாறிக்கொண்டிருக்கும் காலங்களிலும் நல்லாசிரியர்கள் தங்கள் குணங்களிலும் செயல்களிலும் கேடு அடையாமல், தம்மைச் சூழ்ந்தவர்களுக்கு நல்லுபதேசம் செய்துகொண்டிருப்பர். இவ்வாறு பல வகைகளிலும் ஆசிரியர்களுக்கும் மலைகளுக்கும் உள்ள ஒப்புமையை நோக்கி ஒருவர்,

“ அளக்க லாகா அளவும், பொருளும்,
துளக்க லாகா நிலையும், தோற்றமும்,
வறப்பினும் வளந்தரும் வண்மையும் மலைக்கே ”

என்று கூறினர்.

5. மலையின் நீல நிறத்தையும் கம்பீரமான தோற்றத்தையும் கண்டு, அதனை நீல மேகக் கடவுளான திருமாலுக்கும், பளிங்கு போல் அதனில் வழிந்தோடும் மெல்லிய அருவிகளை அத்திருமால் தம் மார்பிற் பூணும் முத்தாரங்களுக்கும் ஒப்பிடுவர். மலைக்காட்சி மிக்க இன்பத்தைத் தருவதாகும். நீலகிரி, திருக்குற்றாலம் முதலிய இடங்களுக்குச் செல்பவர் அக்காட்சிகளை உள்ளபடி அறியலாம். ஆங்குள்ள மலரும், கிழங்கும் காயும் கனியும், செடிகளும், கொடிகளும், மரங்களும் பறவைகளும், விலங்குகளும்,. பள்ளத்தாக்குகளும், சுனைகளும், அருவிகளும், காட்டாறுகளும், மேடுகளும் பாறைகளும், சிகரங்களும் பார்ப்பவர் மனத்துக்கு வியப்பைத் தந்து, கடவுளின் படைப்பு விநோதங்களைப் புலப்படுத்தும்.

6. மலைவெடிப்புக்களில் பெரிய பாம்புகள் உறங்கும். பாறைகளின் இடுக்குகளில் காட்டுப்பன்றிகள் தம் பேடுகளோடும் குட்டிகளோடும் தங்கும். சில இடங்களில் முள்ளம்பன்றிகள் சாதுவாகப் படுத்திருந்து தம்மை யாரேனும் பிடிக்க வந்தால் தம் உடல்களை உதறிக்கொண்டு, ஈட்டிகள் போன்ற தம் உடல் முட்களை விரித்துப் பாய்வது கொடிய காட்சியாகும். யானைகள் கூட்டங்கூட்டமாய்த் திரிவது கற்பாறைகள் அசைவது போல் தோன்றும். புலிகளும், சிறுத்தைகளும், நரிகளும் பகலிற் குகைகளில் அடைத்துக்கிடைந்து இரவு நேரங்களில் வேட்டைக்குச் செல்லும். சாதுக்களான மான்களும், காட்டுப் பசுக்களும், கானக் கோழிகளும் அச்சமின்றி அங்குமிங்கும் அலைந்து திரிவது கண்கொள்ளாக் காட்சியாகும். மயில்கள்

ஆட, வண்டுகள் ரீங்காரம் பண்ண, குயில்கள் பாட இவ்வாறு அமைவது ஒரு நாடகசாலையைப் போன்ற தோற்றத்தை அளிக்கும்.

7. மலையில் இயற்கையாக வசிக்கும் மக்கள் பெரும்பாலும் குறவர்களே. அவர்களுடைய தொழில் வேட்டையாடுதலாம். ஓழிந்த நேரங்களில் அவர்கள் தினை, வரகு, சாமை முதலியவற்றையும் பயிர் செய்வர். அவர்களின் பெண்மக்கள் இளமைப் பருவத்தில் அப் புனங்களிற் காவல் புரிவர். கிளியோட்டுதலுக்காக அவர்கள் எழுப்பும் ஒலி விநோதமாயிருக்கும். சிற்சில சமயங்களில் யானைகள் வந்து அப்புனங்களை அழித்தலும் உண்டு. அப்பொழுது அருகில் வேட்டையாடிக் கொண்டிருக்கும் ஆண்மக்கள் ஓடிவந்து தங்கள் பறைகளை முழக்கியும், விற்களில் அம்பு தொடுத்தும் அவ் விலங்குகளை விரட்டுவர்.

8. சேரன் செங்குட்டுவன் என்ற ஓர் அரசன் ஒரு முறை தன் நாட்டிலுள்ள மலைகளின் அழகைக் காண விரும்பித் தன் அரசியோடும் பரிவாரங்களோடும் சென்றான். அப்பொழுது ஆங்கு வாழ்ந்துவந்த அவனுடைய குடிகளான குறவர்கள் தம் அரசனைக் காணப் பலவகைக் கையுறைகளுடன் வந்தார்கள். அவர்கள் சுமந்துவந்த பொருள்களாவன :— யானைத்தந்தங்கள், அகிற்கட்டைகள், மான்மயிற்கற்றைகள், தேன்குடங்கள், சந்தனக் கட்டைகள், சிந்துரக் கட்டிகள், மஞ்சனத் திரள்கள், அரிதாரம், ஏலக்காய்க்கொடிகள், மிளகுக்கொடிகள், கூவைக்கிழங்கின் மா, கவலைக்கொடி, தேங்காய், தேமாங்கனி, பச்சிலைமாலை, பலாப்பழம், வெள்ளுள்ளி, கரும்பு, பூங்கொடிகள், கமுகின் தாறுகள்,

வாழைத்தாறுகள், ஆளிக்குட்டிகள், சிங்கக்குட்டிகள், புலிக்குட்டிகள், யானைக்குட்டிகள், குரங்குக்குட்டிகள், கரடிக்குட்டிகள், மலையாடுகள், பெண்மான்கள், கத்தூரி மான் குட்டிகள், கீரிப்பிள்ளைகள், தோகை மயில்கள், கானக்கோழிகள். கிளிப்பிள்ளைகள் முதலியன. இப்படிச் சிலப்பதிகாரம் என்னும் நூல் கூறுகின்றது. இவற்றால், மலைகளின் வளம் நமக்கு ஒருவாறு புலப்படும். மலைவாசிகள் பெரும்பாலும் முருகனை வழிபடுவர். திருச்செந்தூர், பழநி முதலிய இடங்களில் முருகன் கோயில்கள் மலைகளில் அமைக்கப் பட்டிருப்பதை நீங்கள்பார்த்திருக்கலாம். வேறு தெய்வங்களுக்கும் மலைகளின்மேல் கோயில்கள் கட்டுவது உண்டு.

9. மலைகள் மிக உயரமாயிருப்பதால் அங்குக் கோடைக் காலங்களில் வெயிலின் வெப்பம் அவ்வளவாகத் தெரியாது. அக்காலங்களில் மக்களிற் பலர் மலைப் பிரதேசங்களுக்குச் சென்று தங்குவர். இக்காலத்தில் நீலகிரி, கோடைக்கானல் முதலிய இடங்களுக்கு மக்கள் கோடையைக் கழிக்கப் போவதை நீங்கள் கண்டிருப்பீர்கள்.

10. மலைச்சரிவுகளில் தகுந்த இடங்களில் தேயிலை காப்பி முதலிய செடிகளை இப்பொழுது பயிராக்குகின்; றனர். தேக்கு, சந்தனம் முதலிய விலையுயர்ந்த மரங்கள் மேற்குத் தொடர்ச்சி மலைகளிற் கிடைக்கின்றன.

11. இவ்வாறு மலைகளால் நாம் அடையும் நன்மைகள் பல. கடவுளின் படைப்பில் மிக மேன்மையான இம்மலைகளுட் சிலவற்றையேனும் நீங்கள் சென்று பார்ப்பது நல்லதாகும்.

### பயிற்சிகள்

#### சொல்லாட்சி

I. (1) சொற்கள்,—அடுக்கம், அரிதாரம், அருவி, எதிரொலி, ஓங்கல், கற்றை, கையுறை, சிலம்பு, சுனை, தாறு, துளக்கல், பண்பு, பரிவாரங்கள் பரந்து, மஞ்சனத்திரள், புனம், வரை, விலங்கல்.

(2) இவற்றை அறிந்துகொள்ளுங்கள் :—

நான்கு + நிலம் = நானிலம்.

நன்மை + ஆசிரியர் = நல்லாசிரியர்.

முத்து + ஆரம் = முத்தாரம்.

வெண்மை + உள்ளி = வெள்ளுள்ளி.

அறிவு + ஈனம் = அறிவீனம்.

(3) இச்சொற்களைப் பிழையில்லாமல் எழுதுங்கள் :—

விலங்கல், பிறங்கல், தொடர்ச்சி, அளவற்றதால், பண்பு, திருக்குற்றாலம், காட்சி சுனை, அருவி, முழக்கம், கற்றை, மலை.

(4) பின்வரும் எதிர்ப்பதங்களை அறிந்துகொள்ளுங்கள் :—

| | |
|---|---|
| வாழ் × வீழ். | தூரம் × சமீபம். |
| உயர் × தாழ். | உள்ள × இல்லாத. |
| பல × சில. | ஒற்றுமை × வேற்றுமை. |
| பொறுமை × பொறாமை. | மேன்மை × கீழ்மை. |
| நிறைய × குறைய. | நன்மை × தீமை. |

#### கேள்விகள்

II. 1. நானிலங்கள் யாவை ?

2. மலைக்குரிய வேறு பெயர்களை எடுத்தெழுதி ஒவ்வொன்றிற்கும் காரணம் கூறுக.

3. மலைகளிற் கிடைக்கும் விலைமதிப்புள்ள பொருள்கள் யாவை?

4. மனப்பண்புகள் என்பன யாவை ?

5. வளமை கொடுப்பதில் ஆசிரியர் எவ்வாறு மலையை ஒப்பர் ?

6. மலை எவ்வாறு திருமாலுக்கு ஒப்பாகும் ?

7. மலைகளிற் காணப்படும் சில பிராணிகளின் பெயர்களைக் கூறுக.

8. முள்ளம்பன்றி தன் பகைவனிடமிருந்து தன்னை எப்படிக் காத்துக்கொள்ளும் ?

9. மலை நாடகசாலையைப் போன்ற காட்சியளிப்பது எப்படி ?

10. குறப் பெண்களின் தொழில் யாது ?

11. குறவர்கள் தம் அரசர்க்குக் கொண்டு வந்த கையுறைகள் யாவை ?

12. குட்டி, பிள்ளை—இவை எப்பிராணிகளுக்கு வழங்கப்படும் ?

13. வெயில் காலத்தில் மலைக்கு மக்கள் செல்வது ஏன் ?

### கட்டுரை

III. 1. சென்னை ராஜதானிப் படத்தைப் பார்த்து ஆங்குள்ள மலைகளின் பெயர்களையும் அவை தொடரும் ஜில்லாக்களின் பெயர்களையும் எழுதுக.

1. நீ ஒரு மலைநாட்டில் இருப்பதாகக் கருதி, அதன் அழகுகளை விளக்கி உன் நண்பனுக்கு ஓர் அழைப்புக் கடிதம் எழுதுக.

3. படத்தைக் கொண்டு உன் ஊரிலிருந்து நீலகிரிக்கு நீ ஒரு பிரயாணம் செய்தது பற்றி ஒரு கட்டுரை எழுதுக.

4. நல்லாசிரியருடைய இலக்கணங்கள் யாவை ?

### இலக்கணம்

### வாக்கியம்

IV. 1. பின்வரும் வாக்கியங்களிலுள்ள பிழைகளைத் திருத்துக :—

(1) குறவர்கள் அரசனைக் காண வருகிறோம்.

(2) நான் மலைகளைப் பார்த்திருக்கிறோம்.

(3) மலைகளின் வளம் நமக்குப் புலப்படுகின்றன.

2. உரிய வினைகளை வேண்டியவாறு அமைத்து வாக்கியங்களை முடியுங்கள் : விரட்டு, அளி, வழிபடு.

(1) மலை நல்ல காட்சியை—

(2) குறவர்கள் மிருகங்களை—

(3) மலைமக்கள் முருகனை—

3. பின்வரும் வாக்கியங்களைப் பிணைத்து எழுதுக:
ஆண்மக்கள் ஓடி வருவர். தங்கள் பறைகளை முழக்குவர். விற்களில் அம்பு தொடுப்பர். அவ்விலங்குகளை விரட்டுவர்.

சொல் - பெயர்ச்சொல்

இடம்

V. நான், நாம், நாங்கள்—தன்மை.
நீ, நீர், நீங்கள்—முன்னிலை.
அவன், அவள், அவர், அது, அவை } படர்க்கை.

மேலே காட்டப்பட்ட சொற்களும் பெயர் சொற்களே. இவற்றுள் ஒருமைப் பெயர்கள் யாவை? பன்மைப் பெயர்கள் யாவை?

## 7. மலை வளம்

திருக்குற்றாலம் என்பது திருநெல்வேலி ஜில்லாவிலுள்ள ஒரு மலைநாட்டு ஊர். அங்கே திருகூடமலை என்ற மலை மிகவும் அழகான காட்சிகளை அளித்துக்கொண்டு விளங்குகிறது. அதனிலுள்ள அருவிகளும் நீர்வீழ்ச்சிகளும் மிகப் பிரசித்தமானவை. குற்றாலத்தில் எழுந்தருளியுள்ள கடவுளின் திருநாமம் குறும்பலா வீசர் என்பது.

இவ்வூரைப் பற்றித் திருகூடராசப்ப கவிராயர் என்ற புலவர் குறவஞ்சி என்ற ஒரு நாடக நூலைப் பாடியுள்ளார். ஒரு குறத்தி தன் மலையை வருணித்துப் பாடுவதாக முதலிரண்டு செய்யுள்களும் அமைத்துள்ளன. மூன்றாவது செய்யுளில் குறத்தி மலைகளின் பெயர்களைச் சொல்லி; அவை யார் யாருக்குச் சொந்தம் என்று கூறுகிறாள்.

[இப்பாடல்களை உரிய செய்கைகளோடு பாடி ஆடுக.]

1. வானரங்கள் கனிகொடுத்து மந்தியோடு கொஞ்சும்;
மந்திசிந்து கனிகளுக்கு வான்கவிகள் கெஞ்சும்;
கானவர்கள் விழியெறிந்து வானவரை அழைப்பார்;
கவனசித்தர் வந்துவந்து காயசித்தி விளைப்பார்;

தேனருவித் திரையெழும்பி வானின்வழி ஒழுகும் ;
செங்கதிரோன் பரிக்காலும் தேர்க்காலும் வழுகும் ;
கூனல்இளம் பிறைமுடித்த வேணிஅலங்காரர்;
குற்றாலத் திரிகூட மலையெங்கள் மலையே.

2.முழங்குதிரைப் புனலருவி கழங்கெனமுத் தாடும் ; [ம்;
முற்றமெங்கும் பரந்துபெண்கள் சிற்றிலைக் கொண்டோடு
கிழங்குகிள்ளித் தேனெடுத்து வளம்பாடி நடிப்போம் ;
கிம்புரியின்கொம்பொடித்து வெம்புதினை இடிப்போம்;
செழுங்குரங்கு தேமாவின் பழங்களைப் பந்தடிக்கும் ;
தேனலர்சண் பகவாசம் வானுலகில் வெடிக்கும் ;
வழங்குகொடை மகராசர் குறும்பலவி லீசர் ;
வளம்பெருகுந் திரிகூட மலையெங்கள் மலையே.

3.கொல்லிமலை யெனக்கிளைய செல்லிமலை யம்மே ;
கொழுநனுக்குக் காணிமலை பழனிமலை யம்மே ;
எல்லுலவும் விந்தைமலை யெந்தைமலை யம்மே ;
இமயமலை யென்னுடைய தமையன்மலை யம்மே ;
சொல்லரிய சாமிமலை மாமிமலை யம்மே ;
தோழிமலை நாஞ்சிநாட்டு வேள்விமலை யம்மே ;
செல்லினங்கள் முழவுகொட்ட மயிலினங்க ளாடும் ;
திரிகூட மலையெங்கள் செல்வமலை யம்மே !

—திருக்குற்றலக் குறவஞ்சி.

## குறிப்புக்கள்

1. வானரங்கள் - குரங்குகள். கனி - பழம். மந்தி - பெண்குரங்கு. வான் கவிகள் - பெரிய குரங்குகள்.

கானவர் - காட்டில் வசிப்பவர். விழி எறிந்து - கண்களை வீசி. வானவர் - தேவர். கவன - (ஆகாய வழியே) வேகமாகச் செல்லக்கூடிய. காயசித்தி - சரீரத்தை நரைதிரையின்றி நெடு நாளிருக்கச் செய்யும்வித்தை. விளைப்பார் - செய்வார்.

திரை - அலை. கதிரோன் - சூரியன். பரி - குதிரை. வழுங்கும் - வழக்கும்.

கூனல் - வளைந்த தன்மை. வேணி - சடாமுடி. அலங்காரர் - அழகுடைய சிவபிரான்.

2. முழங்கு - ஒலிக்கின்ற. புனல் - நீர். அருவி முத்துக்களைக் கழங்கென ஆடும். கழங்கு - பெண்கள் விளையாடும் கழற்சிக்காய். பெண்கள் கட்டும் சிறு மண் வீடுகளை அருவி கொண்டோடும். நாங்கள் கிழங்குகளைத் தோண்டியெடுத்தும் தேன் எடுத்தும் மலை வளம்பாடி ஆடுவோம். கிம்புரிக் கொப்பு - யானைத் தந்தம்.

தேமா - ஒருவகை மாமரம். தேன் அலர் சண்பக வாசம் வான் உலகில் வெடிக்கும். வழங்கு - கொடுக்கிற.

3. செல்வி - இளையவள் பெயர். கொழுநன் - கணவன். காணி - பரம்பரை உரிமையான.

எல் - சூரியன். உலவும் - திரியும். விந்தைமலை - விந்திய மலை. எந்தை - என் தந்தை. மாமி - மாமியார். செல் - மேகம். முழவு - மத்தளம்.

## பயிற்சி

### கேள்விகள்

(1) மலையிலுள்ள குரங்குகள் எப்படி விளையாடுகின்றன ?

(2) மலையின் உயரம் வானத்தை அளாவியிருக்கும் என்பதைப் புலவர் எவ்வாறு அறிவிக்கிறார் ?

(3) சிவபெருமான் தலையில் தரித்திருப்பது என்ன ?

(4) அருவிகள் எவற்றை உருட்டிவரும் ? இஃது எவ்வாறு கூறப்பட்டது ?

(5) பெண்கள் சிற்றிலை எங்கே கட்டுவர் ?

(6) குறவர் உணவுகள் யாவை ?

(7) குறத்திக்கு யார் யார் உறவினர் ? அவரவருக்கு உரிய மலைகள் யாவை ?

(8) மலையில் நடக்கும் இயற்கை நடனம் யாது ?

(9) கிள்ளி, எடுத்து, பாடி, ஒடித்து - இவை எப்பெயர்களுடன் பொருந்தியவை ?

(10) கொஞ்சும் ; கெஞ்சும். ஒழுகும் ; வழுகும். நடிப்போம் ; இடிப்போம். சொல்லி ; செல்லி ; எந்தை ; விந்தை. சாமி ; மாமி.

இவற்றுள் ஓசை ஒற்றுமை எப்படி அமைந்துள்ளன ? பாட்டுக்கு இவை எப்படி நல்ல ஓசையைக் கொடுக்கின்றன என்று பாருங்கள்.

## 8. அடிமையும் முதலாளியும்

[இது, 'வீட்டில் மாலை நேரப்பொழுது போக்கு' (Evenings at Home) என்ற அரிய நூலிலிருந்து மொழி பெயர்க்கப்பட்டது. இதில் ஓர் அடிமைக்கும் அவனை ஆளும் முதலாளிக்கும் இடையே நடந்த சம்பாஷணை அமைந்திருக்கிறது.

இதனை மனதிற்குள் வேகமாகப் படிக்க. பின்வரும் வினாக்களுக்கு விடைகள் இவ்வரலாற்றில் அமைந்துள்ளன. படித்து முடித்தவுடன் அவ்விடைகளைக் கூறுக.]

(1) அடிமை வியாபாரம் நடக்கும் முறை யாது ?

(2) அடிமைகளிடம் முதலாளிகள் அன்பு காட்டுவது முதலாளிகளின் நலத்துக்கே என்பது எவ்வாறு ?

(3) சுயேச்சையில்லாத வாழ்க்கை என் பயனற்றது ?

**முதலாளி :** அடே, பயலே! இரண்டாந் தடவையும் நீ ஓட முயன்றாயல்லவா ? உனக்கு எத்தண்டனை கொடுத்தால் தான் தகாது ?

**அடிமை :** நான் எது சொன்னாலும் பயனில்லை. வருவது வந்தே தீரும். நான் விதிக்குத் தலை குனிய வேண்டியதுதான்.

**முத :** நீ ஒரு அயோக்கியன் அல்லனா ? நெஞ்சழுத்தக்காரன் அல்லனா ? நன்றி கெட்ட பாதகன் அல்லனா ?

**அடி :** நான் ஓர் அடிமை. இதுவே போதிய விடையாகும்.

**முத:** உன் விடை போதியதன்று; சாதாரண அடிமைகளுடைய மனத்தைவிட உன் மனம் சற்று மேலானதென்று எண்ணியிருந்தேன். அதற்குத் தக்க வாறே உன்னை நடத்தினேன். நல்ல உணவும் நல்ல இருப்பிடமும் உனக்கு நான் கொடுத்தேன். உனக்கு வேலையும் அளவுக்கு மிஞ்சிக் கொடுக்கவில்லை. உன் உடல் நோய்ப்பட்டபோது எவ்வளவு கவலையுடன் உன்னை நான் கவனித்து வந்தேன்! இவற்றிற்கெல் லாம் இதுதானா உன் நன்றி?

**அடி:** ஐயா, ஒரு மனிதன் மற்றொரு மனிதனோடு பேசுவது போல் நீங்கள் பேசத் தொடங்கியிருக்கிறீர். கள். ஆகையால் நானும் விடை பகர்கிறேன். என் சுயேச்சையைப் பறித்துக்கொண்டு அதற்கு மாறாக எனக்கு எவ்வளவு நன்மை செய்தாலும் அந்நன்மை யெல்லாம் சுயேச்சைக்கு ஈடாகுமா?

**முத:** நான் உன் சுயேச்சையைப் பறித்தேனா? நீ அடிமையாக விற்கப்பட்டாய். நான் நேர்மையான விலை கொடுத்துத்தானே உன்னை வாங்கினேன்?

**அடி:** விற்பனைக்கு என் மனவொப்பை யாரேனும் கேட்டார்களா?

**முத:** உனக்கு மனவொப்பு என்பதொன்று இருந்ததா? உன்னை அடிமையாகத் தானே வாங்கி வந்திருந்தார்கள்? சுயேச்சைக்கு உரிமையை நீ இழந்த வனாகத்தானே இருந்தாய்?

**அடி:** ஐயா, என் ஆற்றலை நான் இழந்திருந்தேன் என்பது உண்மையே! என் உரிமையை நான் எப்படி இழந்தேன்? என் தாய் நாட்டில் நான் நியாய முறையில் வாழ்க்கையை நடத்திக் கொண்டிருந்தேன். அநியாயமாய் என்னைக் களவாடினார்கள். எனக்கு

விலங்கிட்டு உங்கள் நாட்டினன் ஒருவனுக்கு என்னை விற்றூர்கள். என்னை வலுக்கட்டாயமாய்க் கப்பலி லேற்றி இங்கருக்குக் கொண்டுவந்து சந்தையில் மாடு விற்பதுபோல் என்னை விற்றூர்கள். நீங்கள் என்னை வாங்கினீர்கள். இக்கொடிய அநியாயத்தில் என் உரிமையைக் களவாட எவருக்கு உரிமை இருந்தது? என்னைக் கொள்ளை கொண்ட அக்கொடிய தீயனுக்கா? அல்லது, அவனை அப்படிச் செய்யத் தூண்டிய அடிமை வியாபாரியான பாதகனுக்கா? அல்லது உங்கள் நிலங்களிற் பயிர் செய்யும் பொருட்டு மனித விலங்குகளைக் கொண்டுவரத் தூண்டின உங்களுக்கா? என் சுயேச்சையைக் கொள்ளையிட இக்கொள்ளைக் கூட்டத்தாருள் எவருக்கு உரிமை உண்டு?

முத: ஒருவன் மேலும் மற்ருருவன் கீழுமாக இருக்க வேண்டுமென்பது கடவுள் இட்ட கட்டளை. உலகம் தோன்றின நாள் முதல் அஃது அப்படியேதான் இருக்கிறது. இன்னும் எக்காலமும் அப்படியேதான் இருக்கும். இவ்வழக்கம் என்னுல் ஏற்படவில்லை. வந்த வழக்கத்தை நானும் பின்பற்றினேன்.

**அடி:** ஒரு திருடன் உங்கள் மார்பின் முன் தன் துப்பாக்கியை நீட்டி இச்சொற்களையே கூறினுல் யாது சொல்வீர்கள்? உங்களைக் கொல்லவும், உங்கள் செல்வ ங்களைத் திருடவும் கடவுள் அவனுக்கு வல்லமையை அளித்திருக்கிறுர். அதைப்போலவே, என் பகைவர் களும் என் உடலைத் திருட வல்லமை பெற்றிருந் தார்கள்; என் சுயேச்சையைக் கொள்ளையிட அவர்க ளுக்கு ஆற்றலிருந்தது. கடவுள் அவற்றை அவர் களுக்குக் கொடுத்திருந்தார். அவர்களிடமிருந்து தப்பி யோட எனக்கும் கால்களைக் கொடுத்திருக்கிறுர்.

அவற்றை நான் பயன்படுத்திக் கொள்ளுதலில் கெடுதல் என்ன? எனக்கு வாய்ப்பு உண்டாகுமானுல், பழிக்குப் பழி வாங்காமலிருக்க என்னைத் தடை செய்வது யாது?

முத: நன்றியறிவு வேண்டாமா? உன்னை நான் வாங்கினது முதல் துன்பங்களைத் தீர்க்க நான் எப்பொழுதும் முன் நிற்கவில்லையா? உன் உடலை நன்ருக நான் காக்கவில்லையா? இவற்றிற்கெல்லாம் கைம்மாறு இது தானு? என்னை யன்றி, வேருெருவனிடம் நீ சென்றிருந்தால் உன் நிலைமை எவ்வாறிருந்திருக்கும்?

அடி: ஐயா, உங்கள் தொழுவத்திலிருக்கும் மாடுகளையும் நீங்கள் கவலையுடன் பாதுகாத்து வரவில்லையா? அவற்றிற்குச் செய்வதைவிட எனக்கு என்ன அதிகமாகச் செய்துவிட்டீர்கள்? அடிமைகளை வேலை வாங்குவதைவிட உங்கள் மாடுகளை அதிகமாக வேலைவாங்குகிறீர்களா? அடிமைகளையும் மாடுகளையும் நீங்கள் காப்பது எங்கள் நன்மைக்காகவா? அல்லது, உங்கள் வேலை நன்ருக நடக்க வேண்டுமென்ரு? உண்மையாகச் சொல்லுங்கள். மற்றவர்கள் தங்கள் அடிமைகளையும் மாடுகளையும் நன்ருக வைத்துக் கொள்ளவில்லையென்ருல், அவர்கள் உங்களைவிட அறிவிற் குறைந்தவர்கள். அல்லது உங்களைவிடச் செல்வத்திற் குறைந்தவர்கள்; இவற்றைத் தவிர வேறென்ன?

முத: என்னிடம் அதிகமாய்க் கருணை உண்டென்று சொல்லலாகாதா?

அடி: கருணையா? ஐயா, எங்கள் சுயேச்சையைக் கொள்ளைகொண்டு, உங்கள் மனம்போனபடி எங்களை நடத்தி, உங்கள் காரியஸ்தர்களையும் எங்களிடம் மிருகத் தன்மையாய் நடக்கவிட்டு, எங்கள் மனம், உள்ளம், ஆன்மா எல்லாவற்றையும் பறிமுதல் செய்த

உங்களுக்குக் கருணை யென்ற ஒன்றும் உண்டா? உங்கள் மகிழ்ச்சிக்கும் இலாபத்துக்குமாக நாங்கள் வாழவேண்டுமேயன்றி, எங்களுக்கென்று ஒரு வாழ்வு இருக்கிறதா? இந்த நிலையில் கருணை எங்கே? நன்றி யறிவு எங்கே? ஓர் அரக்கனுக்கும் அவன் வசப்பட்ட எளிய பிராணிக்கும் இடையே இத்தெய்வீக குணங்கள் எப்படி தலைகாட்டும்? என் கைகளையும் கால்களையும் பாருங்கள். இவை ஒரு மனிதனுடையன அல்லவோ? மனிதனுடைய உணர்ச்சி மட்டும் எனக்கு இராதோ?

முத: என் எண்ணங்களை நீ அறியவில்லை. உன்னால் வேலை செய்ய முடிந்தவரையில் உன்னை நன்றாக வைத்திருப்பதோடு, உன் தள்ளாத பருவத்திலும் உனக்கு உணவு போட்டுக் காக்க நான் எண்ணியிருக்கிறேன்!

அடி: ஐயோ! பிறந்த நாட்டை விட்டு, பெற்ற தாய் தந்தையரையும் உடன்பிறந்த சகோதரரையும் கூட வாழும் உறவினர்களையும் நண்பர்களையும் விட்டு கண்காணுச் சீமையிலே மாடோடு மாடாய் உழைக்கும் எனக்கும், தள்ளாத பிராயத்தைக் கருத நேரமுண்டா? எவ்வளவுக் கெவ்வளவு சீக்கிரம் எனக்குச் சாவு வருமோ அவ்வளவுக் கவ்வளவு நல்லதல்லவா? அப்படி யாவது என் ஆன்மா சாந்தமடையாதா?

முத: அப்படியானால், உன்னை அடக்கியாளுவதற்குக் கொடுமையும் வன்மையும் அன்றி வேறெதுவும் பயன் படாதோ?

அடி: ஐயா, சுயேச்சையில் விருப்பமுள்ளவனுக்கு அவ்வொன்றிலன்றி வேறொன்றிலும் மனம் செல்லாது. எவ்வளவு நலன்களை அவனுக்குச் செய்தாலும் அவற்றில் அவனுக்கு விருப்பம் ஏற்படாது.

முத : நல்லது, உனக்கு நான் சுயேச்சை யளிப்பதாக நினைத்துக்கொள். அதை நீ ஓர் உதவியாய் எண்ணு வாயா ?

அடி : ஐயா, அதைவிடப் பேருபகாரம் வேறு உண்டோ? அப்படிச் செய்வீர்களானால் தாங்கள் நியாயமான தொன்றையே செய்தவராவீர்கள்; ஓர் அநியாயத்தை அகற்றினவர் ஆவீர்கள். உலகத்தில் மக்களுக்குத் தம் லாபமே பெரியது ; நியாயத்தைப் பார்க்கமாட்டார்கள். நியாயத்துக்காகத் தந்நலத்தை விடுபவர்களே பெரிய தியாகிகள்.

முத : அப்படியானால், உனக்குச் சுயேச்சை அளித் தேன். நீ எனக்கு அடிமையல்லன்.

அடி : ஐயனே, இன்று முதல் நான் தங்களுக்கு உண்மையான ஊழியனுவேன். தங்கள் அன்புக்கு நன்றிகாட்டும் முறையில் நான் ஒரு செய்தி சொல்லுகி றேன். தங்களைப் பல கொடிய விரோதிகள் சூழ்ந்து கொண்டிருக்கிறார்கள். தங்களுடைய அடிமைகள் எல் லோரும் நேரம் பார்த்துத் தங்களைக் கொலை செய்யச் சதியாலோசனை செய்திருக்கிறார்கள். அவர்களுடைய வெகுளியை அடக்கத் தங்களால் ஆகாது. இதுகாறும் தாங்கள் அவர்களை விலங்குகளாகவே எண்ணி நடத்தி வந்திருக்கிறீர்கள். அவர்களுக்கும் விலங்குகளின் கொடுமைத் தன்மை வயிரமேறியிருக்கிறது. ஒருவரை அடக்கியாள வலிமை ஒன்று மட்டும் போதாது. ஆள் வோனின் ஆற்றல் குறையும்போது அவர்கள் ஈவிரக்க மில்லாமல் அவனைக் கொல்வார்கள். இது தான் முதலா ளிக்கும் அடிமைக்கும் உறவு. இதை நான் தங்கள் நன் மைக்காகச் சொன்னேன்.

## பயிற்சிகள்

### சொல்லாட்சி

I. (1) சொற்கள் : ஆன்மா, உரிமை, ஒப்பு, கட்டளை, கருணை, சதியாலோசனை, சாந்தம், சுயேச்சை, தண்டனை, தியாகி, தெய்வீகம், தொழுவம், நன்றி, நேர்மை, வெகுளி.

(2) தொடர்மொழி : பின் வருவனவற்றை நும் வாக்கியங்களில் அமைக்க :—

தலைகுனிய, தக்கவாறே, தன்னலம், நெஞ்சழுத்தம், மற்றொரு, நியாய முறை, அதைப்போலவே, கைம்மாறு, எவ்வளவுக் கெவ்வளவு, அவ்வளவு கவ்வளவு, கண்காணு, ஈவிரக்கம், பழிக்குப் பழி.

(3) பின்வரும் சொற்களுக்கு எதிரிடைச் சொற்கள் யாவை ? குனிய, நன்மை, இழ, இன்பம், தோற்றம், வாழ், நண்பர்.

(4) பின்வரும் தன்வினைகளுக்குப் பிறவினை கூறுக :—
ஆகும், நட, உண், செல்.

(5) பின்வரும் பெயர்ச் சொற்கள் பிறந்துள்ள வினையடிகள் யாவை ? மகிழ்ச்சி, உணர்ச்சி, உணவு, அறிவு, வாழ்வு, விருப்பம்.

## கேள்விகள்

II. (1) முதலாளி தான் அடிமைக்கு என்ன என்ன நன்மைகள் செய்ததாகக் கூறுகிறான் ?

(2) அடிமை எவ்வாறு கொள்ளையிடப்பட்டான் ?

(3) அடிமை எவ்வுரிமையைத் தான் இழக்கவில்லை யென்று கூறினன் ?

(4) ஓடுவதற்கு அவனுக்கு உரிமையுண்டென்பது எப்படியாகும்?

(5) முதலாளியிடம் கருணையில்லையென்பது எப்படியாகும் ?

(6) அடிமை ஏன் சாவை விரும்புகிறான் ?

(7) முதலாளிக்கு உண்டாகவிருந்த ஆபத்து யாது ?

### கட்டுரை

III. (1) இதனை நடித்துக் காட்டுக.

(2) முதலாளி தான் செய்தது குற்றமென்றெண்ணி வருந்தியதாக ஒரு கட்டுரை வரைக.

(3) அடிமை தன் துன்பங்களை வருத்தத் தன் சகோதரனுக்கு ஒரு கடிதம் எழுதுவதுபோல் எழுதுக.

(4) அடிமைகளுள் இருவர் முதலாளியைக் கொல்லச் சதியாலோசனை செய்வதுபோல் ஒரு சம்பாஷணை அமைக்க.

## 9. இராஜராஜேசுவரம்

[ஒரு நாட்டின் நாகரிகம் அதன் கலைகளால் விளங்கும். கட்டட வேலை ஒரு கலையாகும். தமிழர்கள் இக்கலையில் கைதேர்ந்தவர்களாக இருந்தனர். அவர்களின் கோயில்களின் அழகையும் பெருமையையும் கண்டு உலகத்தவர் இன்னும் வியப்படைகிறார்கள். அக்கோயில்கள் நமக்கே நல்ல மதிப்பைத் தருவனவாகும். இப்பாடத்தில் விவரிக்கப்பட்ட கோயிலின் வரலாறு, அமைப்பு இவற்றைப் படித்தறியுங்கள். இப்பாடத்தைப் படித்து முடிக்க நேரம் எவ்வளவு பிடிக்கிறது, பாருங்கள். அன்பினால் செய்யப்படும் தருமம் கடவுளால் ஒப்புக்கொள்ளப்படும் என்பதும் உடற் சக்தியால் செய்ய முடியாதது ஆத்ம சக்தியால் முடியும் என்பதும், அரசனும் கலைக்குப் பணிவான் என்பதுமான கருத்துக்கள் இப்பாடத்தில் எங்கெங்கும் புலப்படுகின்றன.]

1. ஒரு நாட்டின் மேன்மையை அறிவதற்கு அந்நாட்டிலுள்ள கட்டடங்கள் சிறந்த சாதனங்களாகும். தமிழர்கள் மிகப் பழைய காலம் முதற்கொண்டு கட்டடம் கட்டுவதில் கைதேர்ந்தவர்களாக இருந்து வந்திருக்கிறார்கள். ஏறக்குறைய ஆயிரத்தெண்ணூறு ஆண்டு முன்பு காவிரிப்பூம்பட்டினம், மதுரை, வஞ்சி, காஞ்சி போன்ற நகரங்களிலிருந்த அரண்மனைகளையும், கோயில்களையும், வீடுகளையும் பற்றி அக்காலத்தில் எழுதப்பெற்ற தமிழ் நூல்கள் விளக்கமாய்க் கூறியுள்ளன. ஆனால், அவற்றுள் பெரும் பாலானவை இப்பொழுது காணப்படவில்லை. ஏனென்றால் அக்காலக் கட்டடங்

கள் எல்லாம் செங்கற்களாலும் மரத்தாலுமே கட்டப் பட்டவை.

2. ஆனால் கி. பி. ஏழாம் நூற்றாண்டு முதல் கருங் கல்லைக் கொண்டு கட்டடம் கட்டும் வழக்கம் தமிழ் நாட்டில் ஏற்பட்டது. அத்தகைய கட்டடங்கள் அழியாமல் நீண்டகாலம் நிற்கும் தன்மையுள்ளன. இப்பொழுது தென்னிந்தியாவில் காணப்படும் பழங் கட்டடங்களுள் பலவகைகளிலும் சிறப்பானது தஞ்சா வூரிலுள்ள இராஜராஜேசுவரம் என்ற சிவபிரான் கோயிலே ஆகும்.

3. ஏறக்குறைய ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னே தஞ்சாவூரில் இராஜராஜ சோழன் என்ற அரசன் ஆண்டு வந்தான். அவன் வீரம், கல்வி, கொடை முதலிய குணங்களில் மேம்பாடைந்திருந்தான். அவன் பல பகைவர்களையும் வென்று தன் நாட்டை மிகப் பெரியதாக்கிக்கொண்டான். அவன் இருபத்தொன்ப தாண்டுகள் முடிசூடி வாழ்ந்தான். அவன் சிறந்த சிவ பக்தன். அவன் தன் வெற்றிகளுக்கு அறிகுறியாகச் சிவபிரானுக்கு மிகப் பெரிய கோயிலொன்றைக் தஞ்சை யிற் கட்டவேண்டுமென்று எண்ணி, அதற்கு வேண்டிய எல்லாவற்றையும் தயாரிக்கத் தொடங்கினான். அக் கோயிலைக் கட்ட அவனுக்கு ஆறு ஆண்டுகள் பிடித் தன. அதற்குத் தன் பெயரையே அமைத்து 'இராஜ ராஜேசுவரம்' என்ற பெயரையிட்டான்.

4. தஞ்சைக்குச் சென்றால், அக்கோயில் சிவகங் கைக் கோட்டையின் தென்பாதியிலிருப்பதைப் பார்க் கலாம்.

5. கோட்டையைச் சூழ்ந்துள்ள அகழியையும் சுவரையும் கடந்து உட்சென்று 'கேரளாந்தகன்' என்ற

பெயருள்ள முதற் கோபுரத்தைத் தாண்டிக் கொஞ்ச தூரம் சென்ருல், **இராஜராஜன் திருவாசல்** என்ற இரண்டாம் கோபுரத்தை அடையலாம். அதனையும் தாண்டினுல், ஏறக்குறைய ஐந்நூறடி நீளமும் இரு நூற்றைம்பதடி அகலமுமுள்ள ஒரு பெரிய முற்றம் காணப்படும். அதையும் தாண்டி அப்பாலே சென்ருல் ஒரு பெரிய மேடையின்மீது ஒரு பெரிய நந்தியின் உருவம் சுவாமியை நோக்கிப் படுத்திருக்கும் நிலையில் அமைந்திருப்பதைக் காணலாம். அஃது ஒரே கல்லில்



செதுக்கப்பட்டிருக்கிறது. அது பன்னிரண்டடி உயரமும், பத்தொன்பதரை அடி நீளமும் எட்டேகால் அடி அகலமுமுள்ளது. இந்தியாவிலுள்ள நந்திகளுள் இது இரண்டாவது பெரிய நந்தி என்பர்.

6. கடவுள் எழுந்தருளியிருக்கும் இடம் ஒரு பெரிய விமான வடிவமாக அமைக்கப்பட்டுள்ளது. இவ் விமானத்தில் ஏறிக் கடவுளின் திருமுன்பை அடையத் தெற்குப்புறத்திலும் வடக்குப் புறத்திலும் இரண்டு

படிக்கட்டுகள் இருக்கின்றன. இவற்றைத் தவிர, சுவாமிக்கு நேர் எதிராகவும் நேரான படிகள் இருக்கின்றன.

7. கோயிலின் நீளம் 793 அடி; அகலம் 397 அடி. கடவுள் எழுந்தருளியிருக்கும் கருப்பக்கிருகத்துக்கு மேலே உள்ள விமானம் 216 அடி உயரமுள்ளது. அது சதுர வடிவமான பதின்மூன்று கோபுர மாடிகளைக் கொண்டிருக்கிறது. இம்மாடிகளுக்கு மேலே 80 டன் நிறையுள்ள ஒரு சதுரக்கல்லை அமைத்து, அதன் மேல் ஸ்தூபிக் குடத்தை வைத்திருக்கிறார்கள். அதன் அளவு 25½ அடி சதுரம். இவ்வளவு பெரிய கல்லை அக்கோபுரத்தின் மேலே ஏற்றுவதற்கு நான்கு மைல்களுக்கு அப்பாலுள்ள ஓரிடத்திலிருந்து சாரம் கட்டினார்கள் என்று சொல்லப்படுகிறது. அந்த இடம் இப்பொழுது சாரப்பள்ளம் என்ற பெயரைப் பெற்றிருக்கிறது.

8. இக் கல்லைப்பற்றி ஒரு கதையுண்டு. சிற்பிகள் ஓயாமல் இவ்விமான வேலையைச் செய்து வந்த போது, அழகி என்ற பெயரையுடைய ஒரு முதியாள் அச் சிற்பிகளுக்கு உணவு, சிற்றுண்டி, தண்ணீர் முதலியவற்றை அன்புடன் கொடுத்து வந்தாள். அப்பெரிய கோயிலுக்குத் தானும் ஏதாவது ஒரு பொருளைக் கொடுக்கவேண்டுமென்று அவள் விரும்பினாள். அவள் வீட்டில் பெரியதொரு கருங்கல் இருந்தது. அதையெடுத்து விமானத்தில் தகுந்ததோரிடத்தில் வைக்கவேண்டுமென்று அவள் சிற்பிகளைக் கேட்டுக்கொண்டாள். அதற்கிணங்கி அவர்கள் அக் கல்லைச் செதுக்கி ஸ்தூபிக்குடம் வைப்பதற்கு அடித்தளமாக அமைத்துக் கொண்டார்கள்.

9. ஒரு நாள் சிவபெருமான் அரசனின் கனவில் தோன்றி, "அம்மையார் நிழலில் யாம் அமர்ந்துள்ளோம்" என்று கூற, அரசன் திடுக்கிட்டு உண்மையை விசாரித்து அறிந்துகொண்டான். அக் கிழவி கடவுள் பால்கொண்ட பக்திச் சிறப்பைக் கண்டு அரசன் வியந்து அவள் பெயரால் ஒரு குளத்தையும் தோட்டத்தையும் அமைத்து வைத்தான் என்றும் கூறுவர்.

10. விமானத்திற் பல சோழ மன்னர்களின் உருவங்கள் கல்லில் செதுக்கப்பட்டுள்ளன. இராஜராஜனுக்குப் பின் வந்த தஞ்சாவூர் மன்னர்களும் தத்தம் உருவச்சிலைகளை அங்கே அமைத்துள்ளனர். இவ் விமானம் வெகு தூரத்திலுள்ளவர்களுக்கும் கம்பீரமான தோற்றத்துடன் காட்சி யளிக்கின்றது. இராஜராஜனின் புகழ் என்றும் நிலை நிற்கும்படி அவன் கட்டிவைத்த இக் கோயில் தமிழரின் கலைச் சிறப்பை நன்கு விளக்குகின்றது. இதற்கு அரசன் 'தக்ஷிண மேரு' என்று அமைத்த பெயர் மிகப் பொருத்தமானதே.

11. இவ்விமானத்தின்கீழ் அமைந்துள்ள இலிங்கம் மிகப் பெரிய உருவத்தைப் பெற்றதாயிருக்கிறது. கடவுளின் பெயர் இராஜராஜேசுவரமுடையார் என்பது. பிருகதீசுவரர், பெருவுடையார் என்ற பெயர்களும் அவருக்கு உண்டு.

12. கோயில் கட்டி முடிந்தவுடன் அங்கு எழுந்தருளியுள்ள கடவுளரின் திருவுருவங்களைக் கெட்டியாய் அமைக்கும்படி மருந்து சாத்துவது வழக்கம். இராஜராஜேசுவர் லிங்கத்திற்கு இவ்வாறு மருந்து சாத்தும்போது அம்மருந்து எவ்வளவு முயன்றும் கெட்டிப்படாமல் போயிற்று. அரசன் அதைக் கண்டு மிகவும் வருந்தினன். அச்சமயத்தில் கடவுள் அசரீரியாக, "கருவூர்த்

தேவரை வரவழைத்தால் இக்காரியம் நிறைவேறும்" என்று கூற, அரசன் அவ்வாறே அவரை அழைக்க ஏற்பாடு செய்தான்.

13. கருவூர்த்தேவர் என்பார் அக்காலத்தில் வாழ்ந்த ஒரு முனிவர். அவர் தம் தவ வலிமையால் பிறரால் செய்ய முடியாத காரியங்களைச் செய்துமுடிக்கத் தக்க வலிமை பெற்றிருந்தார். அரசன் அவரை அழைத்து இலிங்கத்தைப் பிரதிஷ்டை செய்து தரவேண்டுமென்று விண்ணப்பித்தான். தேவர் தம் வாயின் தம்பலத்தை மருந்தின் மீது உமிழ, அது பொன்னை உருக்கி வார்த்தது போலாகி, இலிங்கம் கெட்டிப்பட்டது.

14. இக்கோயிலில் இராஜராஜன் வேறு பல தெய்வங்களுக்கும் தனித்தனியே இடங்கள் அமைத்து, அவர்களின் வடிவங்களையும் நிலைநிறுத்தினான். அளவுகடந்த திருவாபரணங்களை அக்கோயில்களுக்கென்று அவன் கொடுத்தான். பூஜை முதலியன செய்வதற்குவேண்டிய பொருள்களையெல்லாம் அவ்வப்போது கோயிலுக்குக் கொடுத்துவருவதற்கும் அவன் ஏற்பாடு செய்தான். தமிழிலும் வடமொழியிலும் தேர்ந்த அறிஞர்களை அவன் நியமித்துக் கோயிலில் தினந்தோறும் வேதம், தேவாரம் முதலியவற்றை ஓதிவர அவன் திட்டப்படுத்தினான். ஆடல், பாடல்களில் தேர்ந்த பலர்க்குக் கோயிலுக்கு அருகாமையில் வீடுகளைக் கட்டிக் கொடுத்து அவர்களைப் பூஜா காலங்களில் கோயிலுக்குப் பணிவிடை செய்யவும், பாடவும், ஆடவும் அவன் கட்டளையிட்டான்.

15. மாதந்தோறும் திங்கள் விழாவும், ஆண்டு தோறும் வைகாசி மாதத்தில் பெரு விழாவும் நடத்த அரசன் விதிகளை வகுத்தான். மாதவிழா அரசனுடைய

பிறந்த நாளாகிய சதய நக்ஷத்திரந்தோறும் நடப்ப தாகும். வைகாசிப் பெருவிழாவில் 'இராஜராஜேசுவர நாடகம்' என்ற ஒரு நாடகமும் கோயிலில் நடத்தப் பட்டு வந்தது.

16. இராஜராஜனுக்குப் பின் வந்த மன்னர்களும், இக்கோயிலைத் தம் கண்போல் காப்பாற்றி வந்தனர். தக்ஷிணமேரு விமானத்தின் வடமேற்குப் புறத்தில் முருகப்பிரானுக்காக ஒரு கோயில் கட்டப்பட்டிருக் கிறது. இது தஞ்சையில் அரசாண்ட நாயக்கர் வமிசத்து மன்னர் ஒருவர் காலத்திற் கட்டப்பட்டது. இதனிலுள்ள சிற்ப வேலைகள் மிகத் திறமையானவை. இக்கோயில் ஓர் இரதம்போல் அமைக்கப்பட்டுள்ளது. இதைப்பற்றியும் ஒரு வரலாறு கூறப்படுகிறது.

17. சிறந்த சிற்பி ஒருவன் தக்ஷிணமேருவில் மிகவும் அருமையாய்த் தன் வேலையைச் செய்துகொண் டிருந்தான். அவனுடைய அடைப்பைக்காரன் கீழே நின்றுகொண்டு வெற்றிலை மடித்து அவனுக்குக் கொடுத்துக்கொண்டிருந்தான். சிற்பி வேலையில் கண் ணுங் கருத்துமாய் இருந்ததால் தன் ஆளைப்பார்க்காமல் அவன் கொடுத்துவந்த வெற்றிலைச் சுருளைமட்டும் வாங்கித் தின்றுவந்தான். சிற்பியின் வேலைத் திறமையை மெச்சி அரசன் ஒருநாள் அடைப்பைக்காரனை இரகசிய மாக அப்புறப்படுத்திவிட்டுத் தானே அவனுக்குப் பதிலாக நின்று தான் தின்னும் வெற்றிலையை அவனுக் குக் கொடுக்கத் தொடங்கினான். பாக்கின் புதிய வாச னையைக் கண்டு சிற்பி கீழே குனிந்து பார்க்க, அரசன் நின்று வெற்றிலை மடித்துக்கொண்டிருப்பதைக் கண்டு திடுக்கிட்டுக் கீழே இறங்கி வந்து அரசனை வணங்கி னான்.

18. அரசனுக்குத் தன் திறமையெல்லாவற்றையுங் காட்டித் தன் நன்றியறிதலைத் தெரிவித்துக்கொள்ளவே அவன் மிக வேலைப்பாடமைந்த சுப்பிரமணிய சுவாமி கோயிலைக் கட்டிமுடித்தான் என்று சொல்லப்படுகிறது. அதன் சுவர்களில் அமைந்துள்ள நகாசு வேலைகள் மிக நுட்பமானவை.

19. இக்கோயிலில் காணக்கூடிய காட்சிகள் இன்னும் பல உண்டு. கோயிற் சுவர்களில் பொறித்துள்ள கல்வெட்டுக்கள் சோழநாட்டு வரலாற்றை அறிவதற்குப் பெருந் துணையாயிருக்கின்றன. இவ்வாறு கட்டப்பட்ட பெருங்கோயில்கள் தமிழ் நாட்டில் பல நூறு உண்டு. அவையெல்லாம் நம் நாட்டுச் செல்வ வளங்களையும், நாகரிக முதிர்ச்சியையும், கலைகளின் மேம்பாட்டையும் நன்கு விளக்குகின்றன.

## பயிற்சிகள்

### *சொல்லாட்சி*

I (1) **சொற்கள் :** *அகழி, அசரீரி, அடைப்பைக்காரன், அறிகுறி,* **ஓது, கல்வெட்டு,** *சாதனம், சாரம், சிற்பி, தம்பலம்,* **தேவாரம், நியமி, நகாசு வேலை, பட்டினம், பிரான், பொறி, விழா.**

(2) கோயிலின் உறுப்புக்களைக் குறிக்கும் சொற்கள் : கருப்பக்கிருகம், கோபுரம், திருமுன்பு, திருவுருவம், படிக்கட்டு, படிவம், முற்றம், விமானம், ஸ்தூபிக் குடம்.

(3) கேரளாந்தகன் - கேரளர்களுக்கு யமன்; இராஜராஜன் - அரசர்க்கு அரசன் ; தக்ஷிணமேரு - தெற்கேயுள்ள மேரு.

(4) பிழையில்லாமல் எழுதுக : பட்டினம், தென்னிந்தியா, கட்டடம், பன்னிரண்டு, பதின்மூன்று, சிற்பி, அறிஞர், விழா, தவிர.

(5) வேற்றுமை கூறுக . குடை - கொடை ; மடி - மாடி ; புரம் - புறம் ; மன்னர் - மள்ளர் ; கலை - களை.

(6) காரணங்காட்டிப் பொருள் கூறுக : அரண்மனை, கோயில், சிற்றுண்டி, வடமொழி, வரலாறு.

### கேள்விகள்

II. (1) மிகப் பழைய காலத்துக் கட்டடங்கள் ஏன் இப்பொழுது காணப்படவில்லை ?

(2) இராஜராஜனின் குணங்களில் மேம்பட்டவை யாவை ?

(3) அவன் இராஜராஜேசுவரக் கோயிலைக் கட்டக் காரணம் என்ன ?

(4) தஞ்சையிலுள்ள நந்தியின் சிறப்பு யாது ?

(5) ஸ்தூபிக்குடம் எங்கே வைக்கப்படும் ?

(6) சாரப்பள்ளம் என்ற பெயர் எப்படி உண்டாயிற்று ?

(7) ' அம்மையார் நிழலில் யாம் அமர்ந்துள்ளோம் '—இவ்வாறு கடவுள் கூறக் காரணம் என்ன ?

(8) தக்ஷிணமேரு என்ற பெயர் தஞ்சைக் கோயில் விமானத்துக்கு எப்படிப் பொருத்தமாகும் ?

(9) கருவூர்த் தேவரின் பெருமை யாது ?

(10) அவர் எவ்வாறு இலிங்கத்தைப் பிரதிஷ்டை செய்தார் ?

(11) கோயிலில் கல்வி பெருக அரசன் செய்த ஏற்பாடுகள் யாவை ?

(12) சுப்பிரமணிய சுவாமி கோயில் கட்டப்பட்ட வரலாறு என்ன ?

### கட்டுரை

III. (1) ' நீ இராஜராஜேசுவரன் கோயிலைக் கண்டதாக அதனை விவரித்து உன் நண்பனுக்கு ஒரு கடிதம் எழுதுக.

(2) கோயில்களால் வளரும் கலைகள் யாவை ?

(3) உன் கிராமத்துக்கு அருகில் உள்ள பெரிய கோயிலை நேரிற் சென்று பார்த்தும் விசாரித்தும் அதைப்பற்றி ஒரு கட்டுரை எழுதுக.

## இலக்கணம்

### வாக்கியம்

IV. (1) பின் வரும் சொற்களை நம் சொந்த வாக்கியங்களில் அமைக்க :—ஏறக்குறைய, ஏனென்றால், ஆனால், ஆகையால், மற்றும், பற்றி.

(2) பின்வரும் வாக்கியங்களைக் குறித்தபடி பிணைத்துக் காட்டுக.

(i) அக்காலத்தில் தமிழ் நூல்கள் எழுதப்பெற்றன. அவை கட்டடங்களைப் பற்றி விளக்கமாய்க் கூறுகின்றன. (எழுதப்பெற்ற என்று எழுது)

(ii) தென்னிந்தியாவில் பழங் கட்டடங்கள் காணப்படுகின்றன. அவற்றுள் தஞ்சைக் கோயில் சிறந்தது. (காணப்படும் என்று எழுது)

(iii) கடவுள் ஓரிடத்தில் எழுந்தருளி யிருக்கிறார். அது ஒரு விமான வடிவாய் இருக்கிறது. (எழுந்தருளியிருக்கிற என்று எழுது)

### சொல்—பெயர்ச்சொல்

### வேற்றுமை

(3) ஒரு பெயர்ச்சொல்லின் பொருளை வேற்றுமைப் படுத்தும் உருபு வேற்றுமை உருபு எனப்படும். வேற்றுமை உருபுகள் எட்டு வகைப்படும். அவை பின்வருமாறு :—

| | | |
|---|---|---|
| 1. முதல் வேற்றுமை | உருபு இல்லை | இராமன் வந்தான். |
| 2. இரண்டாம் ,, | ஐ | இராமனைக் கண்டேன். |
| 3. மூன்றாம் ,, | ஆல், ஆன், ஒடு, ஓடு, உடன் | இராமனால் கட்டப்பட்டது. இராமனோடு வந்தேன். (முதலியன) |
| 4. நான்காம் ,, | கு | இராமனுக்குக் கொடுத்தேன். |
| 5. ஐந்தாம் ,, | இல், இன், நின்று, இருந்து, | இராமனில் பெரியவன். (முதலியன) |
| 6. ஆறாம் ,, | அது, ஆது, அ, உடைய, | இராமனது கை (முதலியன) |

| | | | |
|---|---|---|---|
| 7. ஏழாம் | ,, | இல், இடத்தில், கண், | இராமனிடத்தில்இருக்கிறது. (முதலியன) |
| 8. எட்டாம் | ,, | கூப்பிடுதல் பொருள் | இராமா, வா. (முதலியன) |

அவன் தன்னுடைய வெற்றிகளுக்கு அறிகுறியாகச் சிவ பெருமானுக்கு மிகப் பெரிய கோயிலொன்றைத் தஞ்சையிற் கட்டினன்.

ஈசா! உன்னிலும் பெரியோன் உண்டோ?

தடித்த எழுத்துச் சொற்கள் எவ்வேற்றுமைகளில் அமைந்துள்ளன?

## 10. விமானப் படையெடுப்பும் பாதுகாப்பும்

[ஏ. ஆர். பி. உடையில் உள்ள உத்தியோகஸ்தர்களை நீ கண்டிருக்கிருயா? அபாயச் சங்கு ஊதுவதைக் கேட்டிருக்கிருய் அல்லவா? பதுங்கிடங்களைப் பார்த்திருக்கிருய் அல்லவா? இவற்றையெல்லாம் பற்றி இப்பாடம் விளக்குகிறது. இதை மனத்திற்குள் ஆழ்ந்து படித்துப் பின்வரும் விஷயங்கள் எந்த எந்தப் பத்தியில் கூறப்பட்டன என்று கூறுக.

(1) விமான வகைகள்.

(2) குண்டு வகைகள்.

(3) விமானத்தைத் தடுக்கும் முறைகள்.

(4) அபாயச் சங்கு ஒலித்தவுடன் மக்கள் செய்ய வேண்டியவை.]

1. நாகரிகம் முதிர்ந்துகொண்டே வருகிறது. நாம் புதிய புதிய நன்மைகளை அடைந்து வருகிறோம். தந்தி, ஆகாயவாணி, வானத்திற் பிரயாணஞ் செய்தல் முதலிய பல நூதன நன்மைகள் நமக்கு உண்டாயிருக்

கின்றன. அவற்றைப்போலவே புதிய தீமைகளும் நாளுக்கு நாள் வளர்ந்துகொண்டே வருகின்றன. முன் கேட்டறியாத பல நோய்கள் உலகத்தில் தோன்றி யுள்ளன. அவற்றைத் தடுக்கும் வழிகளை நாம் கற்க வேண்டியவர்களா யிருக்கிறோம். நகர வாழ்க்கை அதிகமாகிவிட்டபடியால், அபாயமுண்டாகாமல் சாலை களில் எப்படி நடப்பது என்பதும் நாம் அறியவேண்டி யிருக்கிறது. அதைப்போலவே விமானப்படை எதிர்ப் பால் உண்டாகும் தீமைகளையும், அவற்றினின்று நம்மைக் காத்துக்கொள்ளவேண்டிய முறைகளையும் நாம் அறிந்திருக்கவேண்டியது இப்பொழுது இன்றியமையா ததாய் இருக்கிறது.

2. இக்காலத்தில் நடக்கும் போர்களில் ஆகாயப் போர் மிகவும் கொடுமையானது. கண்ணுக்குத் தெரியாத தூரத்திலிருந்து மணிக்கு முந்நூறு மைல் செல்லக்கூடிய வேகத்தில் பறக்கும் விமானங்களைக் கொண்டு, பகைவன் ஒரு நாட்டின்மீது குண்டுகளை வீசி அளவிறந்த சேதத்தை உண்டாக்கலாம். அப்படி வரும் பகைவர்களின் விமானங்களைத் தடுக்கத் துரைத்தனத்தார் பல முறைகளைக் கையாண்டு வரு கின்றனர்.

3. போர்களுக்குரிய ஆகாய விமானங்கள் பல வகைப்படும். சில பாரமான பொருள்களைத் தூக்கிச் செல்லத் தக்கவை ; அவை மிக வேகமாகப் போக மாட்டா, சில மிக வேகமாகப் பறக்கக் கூடியவை ; அவற்றில் மிகப் பளுவான பொருள்களை ஏற்றமாட் டார்கள். சில விமானங்கள் பகைவரின் விமானங்களை

அடித்துத் துரத்தவே ஏற்பட்டன; சில குண்டுகளை வீசவே ஏற்பட்டன.

4. இப்படிப் பல வகையான விமானங்களைக் கொண்டு பகைவன் ஒரு நாட்டை நோக்கி வரலாம். ஆனால், அவ்விமானங்கள் கண்ணுக்கெட்டாத தூரத்தில் வரும்போதே அவற்றின் ஒலியால் அவற்றின் வருகையைக் கண்டறிய இயந்திரங்கள் இருக்கின்றன. தூரதிருஷ்டிக் கண்ணாடிகளாலும் அவற்றின் வருகையை முன்னதாகவே அறிந்துகொள்ளலாம்.

5. இவ்வாறு விரோதியின் விமானங்கள் வருகின்றன என்று அறிந்தவுடன், அவற்றை எதிர்த்துப் போர் புரிந்து, அவற்றை அழிக்கத் தரையிலிருந்து விமானங்களை எழுப்பிவிடுவர். அவைகளையும் மீறி அவை நகரத்துக்கு அருகே வந்துவிடுமானால் அவை வானத்திலேயே சிக்கிக்கொள்ளும்படி ஆகாயத்தில் 'பலூன் வேலி' என்ற ஒருவகைத் தடுப்பை அமைத்து வைத்து அதனில் அவை மாட்டிக்கொள்ளப் பார்ப்பர். அவ்வேலியையும் கடந்து விமானங்கள் வருமானால், தரையில் பலவிடங்களில் வைக்கப்பட்டிருக்கும் எதிர்ப்புப் பீரங்கிகளிலிருந்து குண்டுகளை வீசி அவ்விமானங்களை வீழ்த்துவர். இவ்வாறெல்லாம் பகைவரின் விமானங்களைத் தொலைக்க ஒவ்வொரு நாட்டிலும் முன்னெச்சரிக்கையாகப் பல தயாரிப்புக்களைச் செய்து வைத்திருக்கிறார்கள்.

6. என்றாலும், பகைவர்கள் எப்படியாவது இத்தனை பாதுகாப்புக்களையும் கடந்து நகரங்களுக்கு மேலே பறந்து தங்கள் நாச வேலைகளைச் செய்துவிடலாம்.

அவர்கள் வீசும் குண்டுகள் பல வகைப்படும். சில



மிகப் பெரியவை. அவை பெரிய கட்டடங்களை ஒரே அடியில் தகர்த்துவிடும். அவற்றுள் சில ஓராள் உயரமுள்ளவை. அவை சாலை நடுவில் விழுந்தால் அங்கே கேணிபோன்ற பெருங் குழியைச் செய்யும். இக்குண்டுகள் பெரிய கோட்டைச் சுவர்கள், கட்டடங்கள் முதலியவற்றைத் தகர்க்கவே எறியப்படும். மற்ருெரு வகைக் குண்டுகள் உருவத்தில் சிறியவை. அவை கீழே விழுந்து நெருப்பை உண்டாக்கும். நெருப்பின் தீ மிகக் கொடுமையாய் இருக்கும். அதற்கருகில் யாரும் நெருங்குதல் முடியாது.

7. இன்னும் வேறு வகைக் குண்டுகளும் உண்டு. அவற்றின் தன்மைகளையும் அவற்றை அணைக்கும் விதங்களையும்பற்றிப் பெரியோர்கள் நன்கு அறிந்திருப்பார்கள். ஆனுல் இளைஞர்கள் முதல் எல்லோரும் விமானப் படையெடுப்புக் காலத்திற் பின்பற்ற வேண்டிய விதிகள் பல உண்டு. அவற்றை அறிந்து கொண்டு, அவற்றின்படி நடந்துகொள்வது நம்கடமையாகும்.

8. எதிரிகளின் விமானங்கள் வருவதை அறிந்தவுடன் அதற்காக வைத்திருக்கும் அபாயச் சங்கை ஊதுவார்கள். அவ்வொலி நெடுந்தூரம் கேட்கும். அதைக் கேட்டவுடன் எவரும் வெளியே செல்லாமல் தத்தம் வீடுகளிலிலேயே தங்கியிருக்கவேண்டும். வீடுகளுள்ளும் பந்தோபஸ்தான அறைகளுக்குச் சென்று அங்கே தங்கியிருத்தல் நல்லது. சாலைகளில் நடந்து கொண்டிருந்தால் ஆங்காங்கே அமைக்கப்பட்டிருக்கும் பதுங்கிடங்களுக்குள் செல்லவேண்டும்.

9. நீங்கள் நடக்கும் சாலைகளின் ஓரங்களில் அமைக்கப்பட்டிருக்கும் பதுங்கிடங்களைப் பாருங்கள். சில தரையில் வெட்டிய பள்ளங்களாகவும், சில தரையின்மேற் கட்டப்பட்ட கட்டடங்களாகவும் இருக்கும். அத்தகைய பதுங்கிடங்கள் அருகாமையில் இல்லாவிட்டால், சாலையோரங்களில் உள்ள பள்ளங்களிலாவது சாக்கடைகளிலாவது



ஒளிந்து கொள்வது நலம். எப்படியானாலும், அபாயச் சங்கு ஒலித்தவுடன் வெளியில் ஒருவரும் நடமாடக் கூடாதென்பது முதல் விதி. அபாயம் நீங்கி விட்டதென்பதை அறிவிக்க மற்றொருமுறை சங்கு ஒலிக்கும் வரையில் அப்படியே தங்கியிருத்தல் அவசியமானது.

10. இரவில் சங்கொலி கேட்டவுடன் வீடுகளில் எரியும் விளக்குகளையெல்லாம் அணைத்துவிட வேண்டும். சிறிதளவு வெளிச்சம் தெரியுமானாலும் வானத்தில் செல்லும் விமானி அதைப் பார்த்து வீடுகளிருக்கும் இடத்தைத் தெரிந்து கொள்வான். ஆகவே இவ்விதியைப் பின்பற்றுவதிலும் நாம் வெகு ஜாக்கிரதையாக இருக்கவேண்டும்.

11. படையெடுப்புக் காலங்களில் வாசற்புறத்திலுள்ள ஜன்னல்களையும் கதவுகளையும் மூடி வைத்துவிட வேண்டும். வாசற்புறத்திற் கண்ணாடிக் கதவுகள் இருத்தல் நல்லதன்று. அப்படியிருக்குமானால் அவற்றை முன் ஜாக்கிரதையாகவே அகற்றி விடவேண்டும்.

12. பெரிய வெடி குண்டுகள் விழுந்தால் நம்மால் ஒன்றும் செய்ய முடியாது. ஆனால், சாதாரணமான நெருப்புக் குண்டுகளே வீடுகளின் மேலும் தெருக்

களிலும் வீசப்படும். அக் குண்டுகளுள் ஒருவகை யான வெறும் நெருப்பைமட்டும் உண்டாக்குவன; மற் ருெரு வகையானவை நெருப்போடு சிறிய சில்லு களையும் வீசக்கூடியவை.

*13.* இவ்விரண்டு வகைக் குண்டுகளும் கீழே விழுந்து நெருப்புப் பற்றிக்கொள்வதற்குமுன் அவைகளை அணைத்து விட்டால் அவற்ருல் தீமை விளையாது. இதற் காக ஈரமணலையும் தண்ணீரையும் எப்பொழுதும் நம் வீட்டில் வைத்திருப்பது நல்லது. தண்ணீரை இறைப்ப தற்காக ஒருவகை ரப்பர்க் குழாயும் உண்டு. அக் குழா யின் விலை அதிகமில்லை, அக் குழாயொன்றை நாம் வீட்டில் வைத்திருப்பது நல்லது. எப்படியாவது தூர த்திலிருந்துகொண்டு, விழுந்த குண்டின்மீது மணலையும் நீரையும் இறைத்து ஈரப்படுத்திஞல் நெருப்பு அணைந்து விடும். சில குண்டுகள் ஈரமாயிருக்கிற வரையில் எரி யாமல், காய்ந்தவுடன் பற்றிக் கொள்ளும்; ஆகையால் அவற்றையும், அவற்றின் துணுக்குகளையும் ஒரு மண் வெட்டியால் எடுத்துத் தண்ணீருக்குள் போட்டு வைப் பது நல்லது.

*14.* நெருப்பணைக்கும் வேலைக்குச் சிறு பிள்ளை கள் போவது நல்லதன்று. குண்டு எந்தமாதிரியான தென்றும், அதை எப்படி அணைக்க வேண்டுமென்றும் பெரியோர்களே அறிவர். ஆகையால் படையெடுப்புக் காலத்தில் சிறுவர்கள் பதுங்கிடத்தை விட்டு வெளி யேருமலே இருத்தல் வேண்டும். ஆபத்துக் காலத்தில் வேண்டியவற்றைச் செய்வதற்குப் பல உத்தியோகஸ் தர்கள் நியமிக்கப்பட்டிருக்கிருர்கள். பெரிய நெருப்புக் களை அணைப்பதற்கும் பெரிய சேதங்களைக் கவனிப் பதற்கும் அவர்கள் வந்துவிடுவார்கள். காயம் பட்ட

வர்களுக்குச் சிகிச்சை செய்யவும் அவர்கள் உதவுவார்கள்.

15. ஆனால், சிறிய காயங்களை நாமே சிகிச்சை செய்துகொள்ளலாம். அதற்கு வேண்டிய பஞ்சு, துணி முதலியவற்றை நாம் முன்னெச்சரிக்கையாக வைத்திருத்தல்வேண்டும். விமானங்களால் சண்டைக் காலங்களில்தான் ஆபத்து நேரும். ஆனால், சாதாரண காலங்களில்கூட இவ்வாபத்துக்களைச் சமாளிக்கும் முறைகளைத் தெரிந்து வைத்திருத்தல் நல்லதாகும்.

## பயிற்சிகள்

### சொல்லாட்சி

I. (1) **சொற்கள் :** அபாயச் சங்கு, அளவிறந்த, அநுஷ்டிப்பது, ஆகாயவாணி, எதிர்ப்புப் பீரங்கி, சமாளி, துணுக்கு, தூர திருஷ்டிக் கண்ணாடி, பதுங்கிடங்கள், பந்தோபஸ்தான, பலூன்வேலி, முன்னெச்சரிக்கை, வெடிகுண்டு.

(2) பிழையில்லாமல் எழுதுக :—

முந்நூறு, கொள்ளலாம், துரைத்தனத்தார், இளைஞர்.

(3) வேற்றுமை கூறுக :—திரை - திறை ; ஊது - ஊறு ; குழி - குளி ; அபயம் - அபாயம் ; எரி - எறி ; இரை - இறை ; கயம் - காயம்.

(4) தெரிந்து கொள்ளுங்கள் :—

வா - வருகை; வெட்டு - வெட்டி; இரு - இருத்தல்; அணை - அணைப்பு ; வீசு - வீச்சு.

### கேள்விகள்

II. (1) புதிய நாகரிகத்தில் உண்டான நன்மைகள் யாவை ?

(2) விமான எதிர்ப்பால் உண்டாகும் நாசங்கள் யாவை ?

(3) பகைவர் விமானங்களைத் தடுக்க ஏற்பாடுகள் யாவை ?

(4) அபாயச் சங்கு எவ்வெவ்விதம் ஒலிக்கும் ? அவற்றின் பொருள் என்ன ?

(5) சங்கொலி கேட்டவுடன் நாம் செய்ய வேண்டியவை யாவை ?

(6) அபாய காலத்தில் விளக்கை ஏன் அணைக்கவேண்டும் ?

(7) சிறு காயங்களைப் பரிகரிக்க நாம் கையில் வைத்திருக்க வேண்டியவை எவை ?

### கட்டுரைகள்

(1) பத்திரிகைகளைப் படித்து இன்று உலகத்தில் எங்கெங்கே போர் நிகழ்கிறது என்பதைக் குறி.

(2) விமான எதிர்ப்பு ஒன்று ஏற்பட்டதாக மனத்தில் எண்ணி, அது கழிந்தவுடன் தெருக்களில் காணப்படும் காட்சியைப் பற்றி ஒரு கட்டுரை எழுது.

(3) அபாயச் சங்கு ஊதினவுடன் என்ன செய்யவேண்டுமென்று உன் தம்பிக்கு ஒரு கடிதம் எழுது.

## இலக்கணம்

### வாக்கியம்

III. பின்வரும் வாக்கியங்களைக் காட்டியபடி பிணைத்து எழுதுக.

(1) பகைவன் விமானங்களைக் கொண்டு வருகிறான். அவன் ஊர்களை நாசமாக்குகிறான். (**கொண்டுவந்து** என்று எழுது.)

(2) விதிகளை நாம் அறியவேண்டும். அவற்றின்படி நடக்க வேண்டும். (**அறிந்து** என்று எழுது.)

(3) அவை சாலை நடுவில் விழும். அங்கே பெரிய குழிகளைச் செய்யும். (**விழுந்து** என்று எழுது.)

### சொற்கள்—பெயர்ச்சொல்

IV. ஒவ்வொரு பெயர்ச் சொல்லுக்கும் **திணை, பால், எண், இடம், வேற்றுமை** இவற்றை நாம் அறியவேண்டும். வாக்கியத்தில் அச்சொற்களின் நிலையையும் நாம் விளக்கவேண்டும்.

### உதாரணம்

**விமானங்கள்** வானத்தில் பறக்கின்றன.

விமானங்கள் :—பெயர்ச்சொல், அஃறிணை, பன்மை, பலவின் பால், படர்க்கை, முதல் வேற்றுமை, பறக்கின்றன என்ற பயனிலைக்கு எழுவாய்.

பின்வரும் பெயர்ச் சொற்களுக்கு மேலே காட்டியபடி இலக்கணம் கூறுக :—

(1) மக்கள் பதுங்கிடங்களில் ஒதுங்குவார்கள்.

(2) சிறிய காயங்களை நாமே சிகிச்சை செய்துகொள்ளலாம்.

## 11. பவளக்கொடி மாலை

[சேராம்பு என்னும் பெயருள்ள நாட்டில் பவளக்கொடி என்ற இளவரசி அரசாண்டு வந்தாள். அக்காலத்தில் அஸ்தினா புரி என்ற நகரில் அரசாண்டு வந்த தரும புத்திரர் என்ற மன்னரின் தம்பியான அருச்சுனன் என்பவன் மதுரையில் ஆட்சி புரிந்து வந்த அல்லி என்ற அரசியை மணந்திருந்தான். அவர்களுக்குப் புலந்தரன் என்ற குமாரன் பிறந்திருந்தான்.

அக்குமாரன் ஐந்து பிராயமுள்ளவனா யிருந்தபோது பவளத்தேரொன்று வேண்டுமென்று விரும்பினான். அதன் பொருட்டு அருச்சுனன் தன் நண்பரும் உறவினருமான கிருஷ்ண பகவானுடன் சேராம்பு நாட்டுக்குச் சென்றான். அங்கே தனிமையில் பவளக்கோடியைச் சந்திக்க விரும்பிக் கிருஷ்ணனைப் பிரார்த்திக்க, அவர் அவனை ஓர் அன்னப் பறவையாக மாற்றித் தான் அவ்வன்னத்தை விற்கும் வேடனாகவும் வேடந் தரித்தார். அவ்வரலாறும், அவ்வன்னத்தைப் பவளக்கொடியாள் வாங்கின கதையும் பின்வரும் வரிகளில் காணப்படும்.]

### கிருஷ்ண பகவான் அருச்சுனனை அன்னப்பறவை யாக்குதல்

அருச்சுனன் தானினைக்க ஆயர்பெரு மாளறிந்து
அன்னத்தின் வடிவாக அப்போதேவரங்கொடுத்தார்;
ஆணா லழகுமன்னன் அன்னத்தைப் போலானான் ;
செட்டை அழகென்ன ! சீருடைய நெற்றியென்ன !
காலி னழகென்ன ! கழுத்தி னழகென்ன !
கண்ணி னழகென்ன ! காது வடிவழகே !
மூக்கி னழகென்ன ! முனைமயிரும் பாவனையும்

## கிருஷ்ண பகவான் வேடனுருவம் எடுத்தல்

அச்சுதா னந்தவரி யாயர் பெருமாளும்
காட்டுக் கிழங்கெடுக்கும் கனவேடன் போலானார் ;
காற்செருப்புங் குல்லாவுங் கைதனிலே மான்றலையும்
பன்றிகுத்தும் ஈட்டிபாலா பல்லயமும் கைப்பிடித்து,
கதையுண்ட வாள்மழுவு கட்கமுங் கைப்பிடித்து,
கருநாயுஞ் சங்கிலியுங் கைதனிலே தான்பிடித்து, [விட்டுப்
அன்னத்தை யேந்திக்கொண்டு அவசரமாய்க் காட்டை



பவளக் கொடியாள் பத்தினியாள் தானிருக்கும்
மண்டபத்து வழியாக வருகிறான் வேடனவன்.

## தோழியர் வினா

ஆரணங்கு தோழிமார்கள் அன்னத்தைத் தாம்பார்த்து,
"ஆரடா வேடுவனே ! அன்னத்தை விற்கிறவன் ?
விற்பதே யாமானால் வேண்டியபொன் கிடைக்குமிங்கே"

## அன்னத்தை விற்றல்

அப்படியே நல்லதென்றான் அழகுள்ள வேடனவன் ;
ஓடியே வந்தார்கள் உத்தமிமுன் தாதியர்கள் ;
பவளக் கொடியாளின் பாதத்திற் போய்ப்பணிந்து,
"ஆரோ ஒருவேடன் அன்னத்தை விற்கவுற்றான் ;
அன்னத்தைப் பார்த்தால் அழகா யிருக்குதம்மா !
கண்ணிட்டுப் பார்க்கவே காண முடியாது ;
எங்கிலும் பார்த்ததில்லை இயலான அன்னமிது ;
வைத்து வளர்க்கலாம் வாங்குமம்மா ஆச்சி' யென்றார்.
அவ்வார்த்தை தான்கேட்டு அன்ன நடைமாது,
' அந்தநல்ல வேடுவனை அழைத்தோடி வாரு'மென்றாள்.
ஓடினார் தாதியரும் ஒருநொடியில் வேடனண்டை ;
"ஆரடா வேடுவனே ! ஆச்சி அழைக்கின்றாள் ;
அன்னத்தைக் கொண்டுவாடா, அழகுள்ள வேடுவனே!"
என்றது சொல்லையிலே இசைந்துவழி நடந்தான்.
பவளக் கொடியாள் பத்தினியாள் முன்னேவந்தான் ;
கண்டாள் பவளக்கொடி கட்டழகி யன்னமதை
'என்னப்பா வேடுவனே ! என்னவிலை யன்ன'மென்றாள்.
'ஆயிரம் பொன்கொடுத்தால் அன்னம் தருவ'னென்றான்
'ஆரடி தாதியளே அளந்துபொன் கொடுத்தி'டென்றாள்.
(வேடன் போயினன் - அதன்பின் பவளக்கொடியாள்)

## அன்னத்தைப் போற்றல்

[அன்னத்தைக் கையில்வாங்கி அழகாய் மடியில்வைத்தாள்]
'ஆரடி தாதியாளே ! அலங்காரச் செங்கமலம் !
இந்த அன்ன மெவ்வெப்போ திரைகள் எடுத்ததோ,
போசனங் கொண்டுவாடி, பொற்கொடியே ' என்றாளே
மாம்பழமும், பலாப்பழமும், மலைவாழை, ரஸ்தாளி,
கரிவாழை, செவ்வாழை, காட்டு விளாம்பழமும்,

கொண்டுவந்து வைத்தாளே கொம்பனையாள் முன்னே
அன்ன மதற்கூட்டி ஆவல் தெளியவைத்து, [தான்;

### அன்னத்துக்குக் கூண்டு அமைத்தல்

“ஆரடி தாதிகளே ! அழையுங்கள் தச்சனைத்தான் ;
ஈழத்துத் தச்சனை இக்ஷணமே யழையு”மென்றாள்.
ஓடினார் தாதியர்கள்; ஒருநொடியி லிட்டுவந்தார் ;
வந்து பணிந்தானே வரிசையுள்ள தச்சனவன் ;
‘என்னை அழைத்தது ஏது கருமம்?’ என்றான்.
‘அன்னமது தானிருக்க அழகுகூண்டு பண்ணு’மென்றாள் ;
சொன்னதுந் தச்சனவன் செப்பனிட்டான் சீக்கிரத்தில் ;
செம்பொனொரு நூறும்பெற்றுத் தொண்டனிட்டுப் [போய்நடந்தான் ;
அன்னத்தைத் தானெடுத்து ஆவலுடன் முத்தமிட்டுக்
கூண்டில் அடைத்தவளும் கொப்பெனவே தானெழுந்தாள்.

### குறிப்புக்கள்

1. ஆயர் பெருமாள் - கிருஷ்ணன்
4. செட்டை - சிறகு.
8 அச்சுத, ஆனந்த, அரி - கிருஷ்ணனின் வேறு பெயர்கள் : ஆயர் - இடையரான கிருஷ்ணபகவான்.
12.—13. ஆயுதங்களின் பெயர்கள்.
17. ஆர் அணங்கு - அழகு பொருந்திய தெய்வம் போன்றவள்.
28. அன்னம்போல் நடக்கும் மாது.
45. கொம்பனையாள் - பூங்கொம்பைப் போன்றவள்.
48. ஈழம் - இலங்கை, இக்ஷணம் - இப்பொழுதே.

### கேள்விகள்

I. (1) அன்னத்தின் உருவம் எவ்வாறிருந்தது ?
(2) கிருஷ்ண பகவான் எவ்வாறு வேட உருவம் தரித்தார் ?
(3) அன்னத்துக்குக் கொடுக்கப்பட்ட உணவுப் பொருள்கள் யாவை ?
(4) கூண்டு யாரால் செய்யப்பட்டது ?

## இலக்கணம்

### வாக்கியங்கள்

II. பின் வருவனற்றைச் சரியான வாக்கிய முறையில் அமைக்க :—

(1) பத்தினியாள் தானிருக்கும் மண்டபத்து வழியாக வருகிறான் வேடனவன்.

(2) ஓடினர் தாதியரும் ஒரு நொடியில் வேடனண்டை.

(3) வந்து பணிந்தானே வரிசையுள்ள தச்சனவன்.

### வாக்கிய உட்பிரிவுகள்

அர்ச்சுனன் தான் நினைக்க, ஆயர் பெருமாளறிந்து, அன்னத்தின் வடிவாக அப்போதே வரங் கொடுத்தார்.

இந்த வாக்கியத்தில் **ஆயர் பெருமாள் வரங்கொடுத்தார்** என்பது **பிரதம வாக்கியம்.** அதை ஒட்டி (1) அர்ச்சுனன் தான் நினைக்க, (2) ஆயர் பெருமாள் அறிந்து, (3) அன்னத்தின் வடிவு ஆக-என்ற மூன்று முடியாத உப வாக்கியங்கள் இருக்கின்றன.

பின் வரும் வாக்கியங்களில் உள்ள பிரதம வாக்கியங்களையும் உப வாக்கியங்களையும் எடுத்து எழுதுக.

(1) தோழிமார்கள் வேடனைப் பார்த்து அவனை அழைத்தார்கள்.

(2) 'இந்த அன்னம் எப்பொழுது இரை எடுக்குமோ அப்பொழுது நீங்கள் இரை கொடுங்கள்'

(3) 'அன்னம் இருக்கத்தக்க கூண்டொன்றை நீ பண்ணு.'

### எழுத்து

எழுத்துக்கள் உயிர், மெய் என இரண்டு வகைப்படும். உயிர் அ முதல் ஔ ஈறாகவுள்ள பன்னிரண்டு எழுத்துக்கள். மெய் க் முதல் ன் ஈறாகவுள்ள பதினெட்டு எழுத்துக்கள். உயிரும் மெய்யும் கலந்த எழுத்துக்கள் உயிர்மெய் எழுத்துக்கள் எனப்படும்.

இப்பாடலில் 27-வது அடி முதல் 50 அடி முடிய இருக்கும் எழுத்துக்களை உயிர், மெய், உயிர்மெய் என்னும் மூவகையாகப் பிரித்து எழுதுங்கள்.

## 12. பரமார்த்த குரு கதை

### பாகம் I—ஆற்றைக் கடத்தல்

[இது நகைச்சுவை ததும்பும் ஒரு கதை. இதனை வீரமா முனிவர் என்ற ஓர் இத்தாலி தேசத்தினர் எழுதினர். அவர் தமிழ் நாட்டுக்கு வந்து தமிழிலே பலபெரிய புஸ்தகங்கள் எழுதியுள்ளார். பல மூடர்கள் ஒன்று சேர்ந்து செய்யும் மூடத்தனமான காரியங்களை இக்கதை தெரிவிக்கும். இப் பாடப் பகுதியில் இரண்டு உட்கதைகள் வந்துள்ளன; அவை யாவை என்று நீங்கள் கண்டறிதல்வேண்டும். மூடர் களின் அறிவீனம் எங்கெங்கு விளங்குகின்றது என்றும் நீங்கள் அறிந்துகொள்ள வேண்டும். ஆசிரியர் குறித்த காலத் திற் படிக்கத் தொடங்கி, நிறுத்தச் சொன்னவுடன் நிறுத்தி, உங்கள் மௌனப்படிப்பு எவ்வளவு தூரம் சென்றிருக்கிறது என்றும் கண்டறியவேண்டும்.]

1. அநியாயபுரிலே 'அஞ்ஞான நிலயம்' என்றொரு மடம் இருந்தது; அந்த மடாதிபதியே பரமார்த்த குரு என்பவர். மட்டி என்றும், மடையன் என்றும், பேதை என்றும், மிலேச்சன் என்றும், மூடன் என்றும் ஐந்து சீடர்கள் அவரை அடுத்திருந்தார்கள். அவர்கள் நிழல் போல அவரை விடாது பின்பற்றித் திரிந்தனர்.

2. ஒருநாள் பரமார்த்த குரு இந்த ஐவரும் தம்மைச் சூழ்ந்து வரப் பயணம் புறப்பட்டுக் கால் நடை யாகக் கிராமாதிகளுக்குச் சென்றார். அவர் தாம் சென்ற இடங்களிலெல்லாம் பழைய சீடர்களைக் கண்டு, அவர்க ளுடைய க்ஷேமலாபங்களை விசாரித்தறிந்து மடத்துக் குத் திரும்பி வந்துகொண்டிருந்தார். அப்போது இராக் காலமாயிருந்தும் வெண்ணிலாவின் உதவியால், சீடரும் அவரும் இளைக்காமலும் வழியில் தங்காமலும் நடந்து வந்தார்கள்.

3. இரவு மூன்றும் சாமமாயிற்று. ஒரு சிற்றாறு குறுக்கிட்டது. குரு அந்த ஆற்றைக் கடக்க அஞ்சி, சீடர்கள் ஐவரோடும் அதன் கரையில் தங்கினார். சற்றுப் பொறுத்து அவர் மிலேச்சனை நோக்கி, "இந்த நதி மிகவும் கொடியது; ஒரு சமயம் விழித்திருக்கும்; ஒரு சமயம் தூங்கும். ஆகையால் இது விழித்திருக் கையில் நாம் இதனைக் கடப்பது பிசகு" எனக்கூறி, அதனுடைய நித்திரையைச் சோதிக்க அவனுக்குக் கட்டளையிட்டார்.

4. அவன் குருமொழியைச் சிரசில் வகித்து, அங் ஙனமே அதனைச் சோதிக்கச் சென்றான். அவன் தன் கையிலிருந்த சுருட்டுப் பற்றவைக்கும் கொள்ளியைத் தூர நின்றுகொண்டு அந்நதி ஜலத்தில் தோய்த்தான். தண்ணீரிற் கொள்ளி படவும், 'சுறீர்' என்று அது புகைந்தது. அதனைக் கண்டவுடன் அவன் பதறி விழுந்து பதைத்துத் துடித்துப் பரிதவித்து எழுந்து ஓடி வந்து குருவைக் கண்டு, "ஐயனே, நதியைக் கடக்க இது நல்ல சமயம் அன்று; அது விழித்திருக்கிறது. அதை நான் கொள்ளியால் தொட்டவுடனே அது, ஒரு கருநாகம்போலச் சீறிக் கொதித்துக் கரிந்து புகைந்து என்மேற் பாய்ந்து என்னைக் கொல்லவந்தது; நான் தப்பிப் பிழைத்ததே தம்பிரான் புண்ணியம்" என்றான், அதற்குக் குருநாதர், "தெய்வச் செயலைக் கடக்க யாராலாகும்? அது தூங்குமட்டும் நாம் சற்றுப் பொறுப்பதே உத்தமம்" என்று கூறினார். ஆகவே, அவர்கள் அறுவரும் அங்கிருந்த ஓர் அடர்ந்த பூஞ் சோலையில் மறைவாகத் தங்கியிருந்தார்கள்.

5. அங்கே பொழுது போகும்படி, அந்த ஆற்றின் விசேஷங்களைக் குறித்து அவர்கள் பலவாறு பேசிக்

கொண்டிருந்தார்கள். அவர்களில் மட்டி என்பவன், “ சுவாமி! இந்த ஆற்றின் மோசத்தைப் பற்றியும், தந்திரத்தைப் பற்றியும், கொடுமையைப் பற்றியும், எனது பாட்டனார் சொல்ல நான் பலமுறை கேட்டிருக்கிறேன். என் பாட்டனார் ஒரு பெரிய வியாபாரி ; ஒரு நாள், உப்புப் பொதி ஏற்றின இரண்டு கழுதைகளை ஓட்டிக்கொண்டு, அவரும் அவருடைய கூட்டாளியும் இந்த ஆற்றைக் கடந்து வந்து கொண்டிருந்தார்கள் ; அப்போது கோடைக்காலம் ஆகையால், நட்டாற்றில் குளிர்ந்த ஜலத்தில் அவர்கள் குளித்துக் கழுதைகளையும் குளிப்பாட்டினார்கள். அவர்கள் அக்கரைக்குப் போனபிறகு, கழுதைகள் பாரமின்றிச் சுளுவாய் நடக்கக் காண்பார்கள் ; உள்ளிருந்த உப்பால் உப்பியிருந்த கோணிப்பைகள் சுருங்கியிருக்கக் கண்டார்கள். அவைகளின் வாய்கள் தைத்தவை தைத்தபடியே இருந்தன. அவைகளின் உள்ளிருந்த உப்பை, தோலிருக்கச் சுளை விழுங்கிபோல, இந்த ஆறு அடியோடு தின்று விட்டது ; அப்போது அவர்கள் இந்நதியைப் பார்த்து, ‘ ஓ, திருட்டாறே ! நீ உப்பைத்தின்ற மதக்கத்தினாலல்லவா எங்களையும் எங்களுடைய கழுதைகளையும் தின்னாமல் விட்டு விட்டனை! அந்த மட்டும் நல்ல சகாயம் செய்தனை ! தெய்வச் செயலால் நாங்கள் பிழைத்தோம் ; தெய்வமில்லாமலா பொழுது போகிறது பொழுது விடிகிறது ! எங்களுக்குக் கெட்டி ஆயுசு ’ என்று சொல்லிச் சந்தோஷப் பட்டுக் கொண்டு வீடுபோய்ச் சேர்ந்தார்கள் ” என்று கூறினான்.

6. பிதகு பேதை என்பவன், “ சில வருஷங்களுக்கு முன்னே, நான் சிறியவனாய் இருக்கையில்,

இந்த ஆறு செய்த தந்திரங்கள் பலவற்றில் ஒன்றைச் சொல்லுகிறேன், கேளுங்கள் சுவாமி! ஒரு நாள் ஒரு நாய் ஒரு மாமிசத்துண்டைத் தனது வாயிற் கௌவிக் கொண்டு இந்த ஆற்றைக் கடக்க நீந்தி வந்துகொண் டிருந்தது. அது இதன் நடுவில் வருகையில், இது தன்னிடத்திலும் ஒரு பெரிய மாமிசத் துண்டிருப்பதாக அந்த நாய்க்குக் காட்டிற்று. ஐயோ! நாய்க்கு என்ன தெரியும்? மிருகம், பாவம்! அது, தனது வாய்க்குகந்த துண்டைவிட்டு, அந்தப் பெரிய துண்டைக் கௌவப் போயிற்று. 'வாய்த் தவிடும் போய், அடுப்பு நெருப்பும் இழந்தவள்போல்' அது ஏமாந்து அக்கரை சென்றது. இப்படி இதன் களவிற்கு அளவில்லை" என்றான்.

7. இப்படி இவர்கள் பேசிக்கொண்டிருக்கையில், அங்கே ஒருவன் குதிரையேறி வரக்கண்டார்கள். ஒரு சாண் அளவு ஆழமுள்ள தண்ணீரில் கொஞ்சமேனும் அஞ்சாமல், அவன், குதிரைமேலிருந்தபடியே அவ்வாற் றைச் 'சர சர'வென்று கடந்து கடுகிவந்தான். அதைக் கண்ட சீஷர்கள் அதிசயம் அடைந்து, "அடடா! எங்கள் குருமணிக்கும் ஒரு குதிரை யிருந்தால் அவரும் அஞ்சாமல் ஆற்றில் இறங்குவாரே! அவரைச் சார்ந்த நாங்களும் அவரோடு பயமில்லாமல் இவ்வாற்றில் இறங்கலாமே! ஒரு சிறு குதிரை இல்லாததனால் அல்லவா நாங்களும் குருபுங்கவரும், இப்படி இங்கே தியங்கியிருக்க நேர்ந்தது! இனி, எந்த விதத்திலாயினும் ஒரு குதிரை வாங்குவதே உத்தமம்" என்று தங்களுக் குள் தீர்மானித்துக் கொண்டார்கள். குருவினிடத்தி லும் அதைப்பற்றி அறிவித்தார்கள். அவர், "இப் போது இதைப்பற்றிப் பேசுவதிற் பிரயோஜனம் என்ன? நாம் இருக்கும் இந்த ஆபத்திலிருந்து தப்பிப்

பிழைத்த பிறகல்லவோ, குதிரை வாங்கப்போகிறோம்! இதைப்பற்றிப் பிறகு பேசிக்கொள்ளலாம். இப்போது பொழுது விடியும் சமயம்; சூரியன் தோன்றப் போகிறான்; நாழிகை ஆகிறது. மடத்திற்குப் போக வேண்டுமே! ஆகையால், ஆற்றின் தூக்கத்தை மறு படியும் சோதியுங்கள்" என்று சீடர்களுக்குக் கூறினார்.

8. அப்படியே மடையன் சென்று அந்தக் கொள்ளிக்கட்டையை நதியின் தண்ணீரிலே தோய்த்



தான். அதன் நெருப்பு அதற்கு முந்தியே அவிந்து போய் இருந்ததால், ஆற்றில் கொஞ்சமேனும் புகை கிளம்பாதது கண்டு, அவன் அதிக சந்தோஷமடைந்து, ஓடிவந்து குரு முதலியோர்களை நோக்கி, "இதுதான் நல்ல சமயம்! இச்சமயம் தப்பினால் வேறு சமயம் கிட்டாது. எல்லாரும் சுறுக்காய் எழுந்து வாருங்கள்! சந்தடி பண்ணாதீர்கள்; பேசப்படாது; பேச்சுக் குரலை

கேட்கப்படாது. ஆற்றுக்கு நல்ல தூக்கவேளை ; இப்போது நமக்குக் கொஞ்சங்கூடப் பயம் இல்லை" என்றான். இந்த நல்ல சங்கதியை **மடையன்** சொல்லக் கேட்ட மற்றவர்கள் எல்லாரும், உடனே ஒருமிக்க எழுந்து, வாயைத் திறவாமல் ஊமைகள்போல ஒருவரோடொருவர் சைகை செய்து பேசிக்கொண்டு, ஆற்றில் இறங்கினார்கள். ஆற்றில் அலை ஓசை கிளம்பாதபடி, அவர்கள் தமது கால்களைத் தூக்கித் தூக்கி ஒவ்வோரடியாகத் தண்ணீர்க்குள் வைத்து, ஊன்றி ஊன்றி மனம் திடுக்கிட்டுப் பதைபதைக்க ஆற்றைக் கடந்து அக்கரை ஏறினார்கள்.

9. கரை ஏறின உடனே அவர்கள், தமது பழம் பாட்டை மறந்து சந்தோஷத்தால் தலைகால் தெரியாமல் கூத்தாடினார்கள். அப்போது மூடன் அவர்களை நோக்கி, "சந்தோஷப்படுவது ஒருபுறம் இருக்கட்டும் ; நாமெல்லாம் சரியாய் வந்து சேர்ந்தோமா ? எண்ணிப் பார்த்தாலல்லவோ தெரியும் ?" என்று தன்னைக் கூட்டாமல் விட்டு மற்றவர்களை எண்ணினான். அறுவரில் ஒருவர் குறையக் கண்டான் ; பயந்தான் ; "அப்பப்பா ! அம்மம்மா ! ஐயையோ ! ஐவர் இருக்கிறோமே ! அறுவரில் ஒருவன் ஆற்றோடு போய் விட்டானே !" என்று குருவைப் பார்த்துக் குளறிக் குளறித் தேம்பி அழுதான். அதைக்கண்ட குருமூர்த்தி அவனை, "அழாதே ! என்ன செய்யலாம் ! ஈசன் கட்டளைக்கு எதிர் உண்டா" என்று கையமர்த்தி, எல்லோரையும் வரிசையாய் நிறுத்தி, ஒருமுறை, இருமுறை மும்முறைத் தமது கைவிரலை நீட்டிச் சுட்டிச் சுட்டி எண்ணி எண்ணிக் கணக்குப் பார்த்தார். சீடனைப்போலவே குருவும், தம்மை நீக்கி எண்ணினார் ;

ஆகையால் ஐவரே இருக்கக் கண்டார். என்ன செய்வார்! அவர் மூடனை நோக்கி, “ஆம்! ஆம்! அப்பா! நீ சொன்னது சரியாயிருக்கிறது; ஐவரே இருக்கின்றோம்; அறுவரில் ஒருவனை ஆறு விழுங்கிவிட்டது” என்று சொல்லி விசனப்பட்டார். பிறகு, மட்டி, மடையன், பேதை, மிலேச்சன் ஆகிய அவர்கள் நால்வரும் தனித்தனி எண்ணிப் பார்த்தார்கள். அவனவனும் தன்னை நீக்கி எண்ணினான். ஆகையால் ஐவரே இருந்தார்கள். ஆறும் பேரைக் காணாமையால், அறுவரில் ஒருவனை ஆறு விழுங்கிவிட்டதென்று அவர்கள் தீர்மானித்துக் கொண்டார்கள்.

### பயிற்சிகள்

#### சொல்லாட்சி

I. (1) சொற்கள்: அஞ்ஞானம், உகந்த, கிராமாதிகள், சிரசு, தம்பிரான், தியங்கி, நிலயம், நித்திரை, பரிதவித்து, புங்கவர், மதக்கம், ஜாமம், க்ஷேமலாபங்கள்.

(2) ஆதி என்பதற்கு முதலான என்பது பொருள். கிராமாதிகள் என்பதற்குக் கிராமம் முதலானவைகள் என்பது பொருள். ஆதி என்பதை வேறு சொற்களோடு கூட்டிச் சில சொற்கள் எழுதுங்கள்.

(3) பிழையில்லாமல் எழுதுக:—கட்டளை, முறை, பலவற்றில், சுறுக்காய், பிரயோஜனம்.

(4) சுட்டிச் சுட்டி, தனித்தனி—இவ்வாறு அடுக்குத் தொடராய் வருவன இன்னும் சில எழுதுக.

#### கேள்விகள்

II. (1) குரு சீடர் இவர்களின் பெயர்கள் அவர்களின் தன்மைகளை எவ்வாறு விளக்குகின்றன?

(2) இந்தப் பாடத்தில் வந்துள்ள வேறு உட்கதைகள் யாவை? இவற்றை நீங்கள் வேறெங்காவது படித்ததுண்டா?

(3) குரு தெய்வ நம்பிக்கை நிரம்ப உடையவர் என்பது அவர் வாக்கால் எப்படித் தெரியவரும் ?

(4) கழுதையின் மேலிருந்த உப்பு என்ன ஆயிற்று ?

(5) ஆற்றில் நாய் கண்ட துண்டம் எது ?

(6) பின்வரும் உவமைகள் எந்த எந்தச் சந்தர்ப்பத்தில் உபயோகப்படுத்தப்பட்டன ?

(i) நிழல்போல.

(ii) கருநாகம்போல.

(iii) தோலிருக்கச் சுளைவிழுங்கி போல.

(iv) வாய்த் தவிடும்போய் அடுப்பு நெருப்பும் இழந்தவள்போல.

## கட்டுரை

III. (1) மேலே காட்டிய பழமொழிகளில் கடைசியிலுள்ள இரண்டை விரித்து ஒவ்வொரு கதை கட்டுக.

(2) மிலேச்சன் ஆற்றைச் சோதித்த முறையை அவன் சொல்வதுபோல் எழுதுக.

(3) இக்கதையை நடித்துக் காட்டுங்கள்.

## வாக்கியங்கள்

IV. பின் வருவனவற்றிலுள்ள பிரதம வாக்கியங்களையும் உப வாக்கியங்களையும் பிரித்தெழுதுக :—

(1) அவன் குருமொழியைச் சிரசில் வகித்து ஆற்றைச் சோதிக்கச் சென்றான்.

(2) என் பாட்டனார் சொல்ல நான் கேட்டிருக்கிறேன்.

(3) மடையன் சென்று கொள்ளிக் கட்டையைத் தண்ணீரில் தோய்த்தான்.

## சொல்—வினைச்சொல்

வினைச்சொல் என்பது தொழிலைக் காட்டும். அவ் வினைச்சொல் அருத்தம் முடிந்து வரும் ; முடியாமலும் வரும். முடிந்த வினைச்சொல் **வினைமுற்று** எனப்படும். முடியாத வினைச்சொல் **எச்சம்** எனப்படும்.

பின்வரும் வாக்கியத்திலுள்ள வினைமுற்றையும் எச்சங்களையும் காட்டுக :—

அது, ஒரு கருநாகம்போல், சீறிக் கொதித்துக் கரிந்து, புகைந்து, என்மேல் பாய்ந்து என்னைக் கொல்ல வந்தது.

### எழுத்து

உயிரெழுத்துக்களில் குறுகிய ஓசையுள்ள எழுத்துக்களைக் குற்றெழுத்துக்கள் என்பர். அவை அ, இ, உ, எ, ஒ என்னும் ஐந்தாம்.

நீண்ட ஓசையுள்ளவற்றை நெட்டெழுத் தென்பர். அவை ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ என்னும் ஏழாம்.

இப்பாடத்தில் 3-ஆம் பத்தியில் வந்துள்ள உயிரெழுத்துக்களில் குற்றெழுத்துக்கள் யாவை ? நெட்டெழுத்துக்கள் எவை ?

## 13. பரமார்த்த குரு கதை

### பாகம்—II

[இது முன் கதையின் தொடர்ச்சி. இதை இன்னும் அதிக வேகமாகப் படிக்கக்கூடும். படிக்கும்போது வார்த்தைகளை ஓசை நயம் உண்டாகும்படி 'ப்ராஸ'மாக அமைந்திருக்கும் இடங்களையும், ஆசிரியர் அவரவர் வாக்கில் அமைத்திருக்கும் பழமொழிகளையும், உவமைகளையும் குறித்துக் கொண்டு படியுங்கள். படித்து முடித்தவுடன் பின்வரும் கேள்விகளுக்குப் பதில் சொல்லுங்கள்.

(1) 'ஆறு பிறந்தவிடமும் புகுந்தவிடமும் கெட்டவை,' எப்படி ?

(2) மந்திரக்காரன் பூஜிக்கும் தெய்வங்கள் யாவை ?

(3) ஆறு பேர்களும் அடிபட்டவுடன் ஒவ்வொருவரும் தம்தம் வலியை எப்படிச் சொல்லிக்கொண்டார்கள் ?]

**1.** குரு சுவாமி, அலறி அலறித் தேம்பித் தேம்பி அழ ஆரம்பித்தார். குரு அழ ஆரம்பிக்கவே, சீஷர்கள், "கூ, கூ" என்று கூச்சலிட்டுப் பிரலாபித்தார்கள்.

எல்லாரும் ஒன்று சேர்ந்து, அழுதுகொண்டே ஆற்றை நோக்கி, “ஓ, கள்ள நதியே! கொடும்பாவி யாறே! கொலைகார நதியே! ‘கொலை, களவு, கள், காமம், குரு நிந்தை’ யென்னும் பஞ்சமா பாதகங்களைப் பறக் கடித்து, அதனால் சாந்தமே ஒருருவெடுத்தாற் போன்ற எமது பரம குருநாதராகிய பரமார்த்த குருவினிடத்திற் பக்தி மிகுந்த சீடனை ஒரு கணப்போதிற் கொள்ளை கொண்டாயே! உனது களவே களவு! இவ்வளவு சூது மனிதர்க்கும் கிடையாது! வாயின்றி வயிறின்றிக் காலின்றிக் கையின்றி, இருந்த இடத்தில் இருந்த படியே இத்தனை தந்திரமாக உளவறிந்து களவுபுரிந்து உன் பசியைத் தணித்துக் கொண்டாயே! நீ பழங் கள்ளன். உனது களவின் உளவை அரசன் அறிந்து, உனக்கும் எங்களைப்போல் உடம்பிருந்தால் கடுந் தண்டனை விதிப்பான்! உனது திருட்டளவு இதுவரை யில் அகப்படாமலே, நீ தப்பித்துக் கொள்கின்றாய்! உனது மனம் என்ன கல்லோ! இரும்போ! மண்ணாங் கட்டியோ! அல்லது வயிரமோ! நீ எத்தனை நாளைக்கு வாழப்போகிறாய்! திருட்டுப் பிழைப்பும் ஒரு பிழைப்பா! ‘பலநாள் திருடன் ஒரு நாளைக்ககப்பட்டுக் கொள்வான்’ என்பதறியாயா? உனது கள்ள உள் ளமே உன்னை வளறச் செய்கிறது. இல்லாவிட்டால், நீ என்றைக்கும் ஒரு விதமாக அலைபுரண்டோடி நீர் நிரம்பி யிருக்கமாட்டாயா! உனது ரூபம் ஜலரூபம் ஆனாலும், பிறந்த இடம் கல்லல்லவா! நீ புகுந்த இடம் மண்ணல்லவா! கல்லைப் போலக் கடினமாகவும் மண்ணைப்போலப் பசையற்றும் உள்ள உனது வஞ்ச நெஞ்சமே நெஞ்சம்; உனக்கு வருவது பஞ்சம்; உனது உருவெல்லாம் நஞ்சம்” என்று ஆற்றை வாயில் வந்த

படியெல்லாம் வைது, பித்தர்களைப் போலப் பேசிக் கொண்டிருந்தார்கள். அதுவரையில், ஆற்றோடு போனவன் இன்னானென அவர்களில் ஒருவனும் அறியவில்லை; அவன் யாவன் எனவும், அவன் இன்ன பேர் உடையான் எனவும் அவர்கள் தெரிந்துகொள்ளவில்லை.

2. அந்தச் சமயத்தில் வழிப்போக்கன் ஒருவன் அங்கு வந்து அவர்கள் படுதுயர் கண்டு பரிதாபங் கொண்டு, "ஏனையா வருந்துகிறீர்கள்? உங்களுக்கு என்ன குறை நேரிட்டது? யாராவது இறந்தார்களா? சொல்லுங்கள்" என்று கேட்டான். அதற்கு அவர்கள், நடந்த விருத்தாந்தத்தை விவரமாய்க் கூறினார்கள். அவன் அவர்கள் முழுமூட சிரோமணிகள் என்றறிந்து கொண்டு, "அடடா! அது இலேசான காரியம் அன்று; ஆற்றோடு போனவனை மீட்டுக்கொண்டு வருவதென்றால் சாமானியமா? என்னைப்போன்ற வல்லவன் முனைந்தாலன்றி மற்றொருவரால் ஆகிற காரியமா அது? ஆகாதாகாது! நானோ, மந்திர வித்தையில் மகா நிபுணன்! தந்திர வித்தையில் சாமர்த்தியக்காரன். மந்திர வித்தை யான் சொன்னபடி ஆடும்; அதர்வண வேத மந்திரக்காளி நான் சொன்னபடி கூத்தாடுவாள்; குட்டிச்சாத்தான் என்னைக் கண்டவுடன் குட்டிக் கரணம் போடுவான்; காட்டேரி, முனியப்பன், மோகினி, யட்சணி முதலிய தேவதைகள் என்னைக் கண்டவுடன் சலாம் செய்து எனக்கெதிரில் ஒதுங்கி நின்று நான் இட்ட வேலையைத் திட்டமாய்ச் செய்யும். எனக்கு நீங்கள் நல்ல வெகுமதி செய்யச் சம்மதித்தால் எனது வல்லமையை இப்போதே காட்டுகிறேன்; ஆற்றோடு போனவனை அரை நொடியில் வரவழைக்கிறேன்; என் திறமையைப் பாருங்கள்" என்றான்.

3. உடனே குருநாதர், கப்பல் கவிழ்ந்து ஜலத்தில் அலையும் ஒருவன் கரையைக் கண்டதுபோல மன மகிழ்ந்து, அவனை நோக்கி, "அப்பா! வழுக்கி விழு கையில் எங்களுக்கு ஊன்றுகோல் போலக் கோலுங் கையுமாய்ப் புண்ணியவான் நீ, எங்கள் குலதெய்வம் போல் எங்கிருந்து வந்தாயோ! தெய்வமே உன்னை இங்கழைத்து வந்துவிட்டது. நீ செய்யப்போவது அசாத்தியமான பெரிய காரியம். நாங்களோ இப்படி அப்படி ஏழைகள் அல்லர்; ஏழைகளில் முதன்மை யானவர்கள். உனது காரியத்தின் அருமை பெருமை அறிந்து, அதற்கு ஈடாக நாங்கள் உனக்கு என்ன வெகு மதி செய்யப்போகிறோம்! உன் பிள்ளை குட்டிகளுக்குப் புண்ணியமாகும். எப்படியாவது உன் மனம் இரங்கி ஆற்றோடு போனவனை நீ வரவழைத்துத் தந்தால் உன்னைக் கையெடுத்துக் கும்பிடுவோம். 'நன்றி மறவேல்' என்றபடி நீ செய்யும் நன்றியை நாங்கள் சாகுமட்டும் மறக்கமாட்டோம். எங்கள் வழிச் செல வுக்கு நாற்பத்தைந்து பணம் முன்றானையில் முடித்து வைத்துக்கொண்டிருக்கிறோம்; வேண்டுமானால், அதை உனக்குக் கொடுத்துவிடுகிறோம். கொஞ்சம் தயவு செய்யவேண்டும்" என்றார்.

4. அதற்கவன் சம்மதித்தான்; தன் கையிற் பிடித்திருந்த நீண்ட தடியை அவர்களுக்குக் காட்டி னான். அது உருண்டு வழுவழுப்பாய் உலக்கைப் பருமனுக்குக் கொஞ்சம் குறைந்திருந்தது. அவன் அவர் களை நோக்கி, "நான் சொன்ன மந்திர ஜால வித்தை இந்தச் சொக்குமாந்தடியில்தான் இருக்கிறது. நீங்கள் அனைவரும் வட்டவடிவமாக நின்று குனிந்துகொள் ளுங்கள். நான் உங்களுக்கு மத்தியில் இந்தத் தடி-

யுடன் நின்று, உங்கள் ஒவ்வொருவர் முதுகிலும் ஒவ்வோரடி கொடுக்கிறேன்; அதனை வாங்கிக்கொண்டு அவனவனும் அவனவன் பேரைச் சொல்லவேண்டியது; நான் கணக்கெண்ணி ஆற்ருேடு போனவனேடு ஆறுபேரைக் காட்டுகிறேன்" என்ருன். அதற்கவர்கள் சம்மதித்து அங்ஙனமே வட்டமாய் நின்ருர்கள்.

5. மந்திர வித்தைக்காரன் அவர்களுக்கு இடையில் நின்று, தன் கைத்தடியால் ஓங்கிக் கொஞ்சமேனும் அஞ்சாமல், குருவின் நடுமுதுகில் நன்ருய் உறைக்க ஓர் அடி கொடுத்தான். அவர், "அப்பப்பா! போதும் போதும்; நான்தான் பரமார்த்த குரு" என்ருர். மந்திரக்காரன் '**ஒன்று**' என்று கணக்காக்கினன். மறுபடியும் அவன் சிறிதும் பின்வாங்காமல், மட்டியின் நடுமுதுகில் உறைப்பாக ஓர் அடி அடித்தான். அவன், "ஐயையோ! முதுகு பிளந்துபோச்சே! போதுமப்பா! போதும்; நான்தான் மட்டி" என்ருன். மந்திரக்காரன் '**இரண்டு**' என்று கணக்கேற்றினன். திரும்பவும் அவன் தைரியமாக மடையன் நடுமுதுகில் உறைக்க ஓர் அடி படாரென் றடித்தான். அவன் 'அம்மம்மா! முதுகு கிழிந்ததே! நிறுத்தப்பா! நிறுத்து; நான்தான் மடையன்' என்ருன். மந்திரக்காரன் '**மூன்று**' என்று கணக்கேற்றினன். இன்னும் அவன், அதிக தைரியமாக, பேதையின் நடுமுதுகில் உரமாக ஓர் அடி படீர் என்றடித்தான். அவன் "ஹரி! ஹரி! போதும், போதும்; நோகுது, நோகுது; முதுகு போகுது, போகுது! நான்தான் பேதை" என்ருன். மந்திரக்காரன் '**நான்கு**'; என்று கணக்கேற்றினன். பின்னும் அவன், சற்றும் பயப்படாமல், மிலேச்சன் நடுமுதுகில் நன்ருய்ப் படும்படி ஓர் அடி கொடுத்தான். அவன்

"சிவ, சிவா! முதுகு பிளந்தது; போதும், போதும்; ஒன்றே போதும். நான்தான் மிலேச்சன்" என்றான். மந்திரக்காரன் 'ஐந்து' என்று கணக்கேற்றினான். கடைசியாய் அவன், மிகவும் உக்கிரமாக. மூடன் முதுகில் உறைக்கும்படி ஓர் அடி படால் என்றடித்தான். அவன், "அய்யய்யா! என் முதுகு போச்சே; முதுகு போச்சே; போதும், போதும்! ஒன்றே போதும், நான்தான் மூடன்" என்றான். மந்திரக்காரன், 'ஆறு' என்று கணக்கேற்றினான். எல்லாரும் அதிசயமடைந்து, தங்களில் ஒருவனும் குறையாமல் இருக்கக் கண்டார்கள்; அவர்கள் அந்த மந்திரக்காரனை வாழ்த்தி மெச்சித் துதித்து அவனுக்குத் தாங்கள் சொன்னபடி பணத்தை அவிழ்த்துக் கொடுத்துவிட்டுப் போனார்கள்.

## பயிற்சிகள்

### சொல்லாட்சி

I. (1) சொற்கள்: அதர்வண வேதம், ஈடாக, உரமாக, களவு, உறைக்க, கணம், குல தெய்வம், கொடும்பாவி, சிரோமணி, சொக்கு மாந்தடி, நஞ்சம், நிபுணன், பஞ்சம், பரமகுரு, பரமார்த்தம், முன்றானை, முனைந்தால், வித்தை, விருத்தாந்தம், ஜாலம்.

(2) 'அலறி அலறி' என்றதுபோல இப்பாடத்தில் அடுக்குத் தொடர்களாக வந்துள்ளவை யாவை?

(3) வஞ்சம், நெஞ்சம், பஞ்சம் என்பனபோலப் பின்வரும் சொற்களுக்கு ஓசை ஒற்றுமையுள்ள வேறு சொற்கள் அமைக்க:—

சாந்தம், திட்டம், பணம்.

(4) சிரோமணி, வித்தை - இச் சொற்களை வேறு சொற்களோடு புணர்த்திக் கூட்டுச் சொற்கள் உண்டாக்கு. உ-ம். மூட சிரோமணி, வேதவித்தை.

(5) அசாத்தியம் - என்பதுபோல அ என்ற எழுத்தைச் சேர்த்து எதிர்மறைப் பொருள் தர இரண்டு உதாரணங்கள் காட்டுக.

### கேள்விகள்

II. (1) பஞ்சமாபாதகங்கள் என்பன யாவை?
(2) அரசன் ஏன் ஆற்றைத் தண்டிக்கவில்லையாம்?
(3) ஆறு வற்றுவதற்குக் காரணம் யாதாம்?
(4) மந்திரவாதி தன் சாமர்த்தியங்களை எவ்வாறு பேசினான்?
(5) குரு மந்திரவாதியை எப்படி வேண்டிக்கொண்டார்?
(6) ஆற்றோடு போனவன் எவ்வாறு வெளிப்பட்டான்?

### கட்டுரை

III. (1) இந்தக் கதையை மந்திரக்காரன் தன் நண்பனுக்குச் சொல்லுவதுபோலக் கூறு.

(2) 'பலநாள் திருடன் ஒரு நாளைக்கு அகப்படுவான்' - இதை விளக்க ஏதேனும் ஒரு கதை நீயாகக் கட்டி வரை.

### இலக்கணம்

IV. பின்வரும் வாக்கியங்களிலுள்ள வாக்கியம், உபவாக்கியங்களைப் பிரித்துக் காட்டு :—

(1) சாந்தமே உருவெடுத்தாற்போன்ற எம் குருவின் சீடனைக் கொள்ளை கொண்டாயே.

(2) ஆற்றோடு போனவனை நான் அரை நொடியில் வரவழைக்கிறேன்.

(3) அவன் தன் கையிற் பிடித்திருந்த தடியை அவர்களுக்குக் காட்டினான்.

### சொல்

#### வினைச்சொல்

(1) நீ பிறந்த இடம் கல்லாய் இருக்கிறது.

இந்த வாக்கியத்தில் **இருக்கிறது** என்பது முற்று. **பிறந்த** என்பது எச்சம். இது இடம் என்ற பெயரைத் தழுவுகிறது. ஆகையால் இது **பெயரெச்சம்**.

பின்வரும் வாக்கியங்களில் உள்ள வினைமுற்றுக்களையும், பெய ரெச்சங்களையும் பிரித்து எழுது :—

(1) நீ புகுந்த இடம் மண்ணாய் இருக்கிறது.
(2) அவன் தன் கையில் வைத்திருந்த தடியைக் காட்டினான்.
(3) ஆற்றிற் போன மனிதனை அவன் கண்டுபிடித்தான்.

## எழுத்து

உயிரெழுத்துக்களில் குறில், நெடில் ஆகியவை யாவை என் பதை அறிந்தீர்கள். உயிர்மெய் எழுத்தானாலும் அவற்றைக் குறில், நெடில் என்று வருக்கலாம்.

அவன், இவன் என்ற சொற்களில் அ, இ என்ற எழுத்துக்கள் ஒருவனைச் சுட்டிக் காட்ட வந்துள்ளன; அவற்றைச் சுட்டெழுத்துக் கள் என்பர்.

அவனா ? எவன் ? ஏது ? யாவன் ? அவனோ ? இவை வினாக்கள். இவற்றுள் வினாவைக் குறிக்கும் எழுத்துக்கள் யாவை ? இவற்றை வினாவெழுத்துக்கள் என்பர்.

பின்வரும் வாக்கியங்களிலுள்ள சுட்டெழுத்துக்களையும் வினா வெழுத்துக்களையும் எடுத்தெழுதுக :—

(1) நானா இதற்குப் பின் வாங்குவேன் ?
(2) இது எனக்கு எம்மாத்திரம் ?
(3) அவர்களுள் யாவன் காணாமற் போனான் ?

## குறிகள்

இப்பாடத்தில் முற்றுப்புள்ளி, காற்புள்ளி, வினாக்குறி, வியப்புக் குறி, மேற்கோள் குறி இவை வந்துள்ள வாக்கியங்களுள் ஒவ்வொன்று எடுத்து எழுதுக.

# 14. சுப்பிரமணிய பாரதியார்

[உலகத்தில் எல்லோரும் பிறந்து இறக்கின்றனர். என்ருலும் சிலர் பெயர்களே நீடித்து நிற்கின்றன. அவர்கள் பணத்திலாவது, கல்வியிலாவது பெரியவர்களாய் இருக்க வேண்டுமென்பதில்லை. இப்பாடத்தில் ஒரு பெரியாரைப் பற்றிப் படிக்கப்போகிறீர்கள். அவருடைய உருவ வருணனை, குண விசேஷங்கள், வாழ்க்கை வரலாறு இவற்றை இப்பாடத்தில் நீங்கள் காணலாம். பாடத்தைப் படித்துப் பாரதியாரை உங்கள் மனக்கண்ணுல் காணுங்கள். இங்கே கூறியதுபோல நீங்களும் நேரிற்கண்ட யாரேனும் ஒரு பெரியாரைப்பற்றி எழுதக் கற்றுக்கொள்ள வேண்டும்.]

1. ஆண்டுதோறும் தமிழ் நாட்டார் செப்டம்பர் மாதம் **11**-ஆம் நாளன்று பாரதியார் தினத்தைக் கொண்டாடி வருவதை நீங்கள் அறிவீர்கள். அப்படி நாடெங்கும் கொண்டாடத்தக்க அவர் யார்? அவருடைய பெருமைகள் யாவை?

2. ஏறக்குறைய அறுபது ஆண்டுகளுக்கு முன்னே எட்டையபுரம் சமஸ்தானத்தில் வேலை பார்த்துவந்த சின்னசாமி ஐயர் என்ற அந்தணருக்கும் அவருடைய மனைவியார் லக்ஷ்மி அம்மாளுக்கும் பாரதியார் புதல்வராகப் பிறந்தார். அவர் சுப்பிரமணியன் என்ற பிள்ளைத் திருநாமம் இடப்பெற்ருர்.

3, எட்டையபுரம் என்பது திருநெல்வேலி ஜில்லாவிலுள்ள ஒரு ஜமீன் நாடு. அங்குள்ள ஜமீன்தார்கள் பரம்பரையாய்த் தமிழ்ப் புலமை வாய்த்து வந்தனர். அவர்கள் தமிழ்ப் புலவர்களையும் தமிழ்க் கல்வியையும் போற்றி வந்தனர். அத்தகைய இடத்திலேதான் பாரதியார் தம் இளமைப் பருவத்தைக் கழித்தார். சின்னசாமி ஐயர் தம் குமாரருக்குத் திருக்

குறள், கம்பராமாயணம், தாயுமானவர் பாடல் முதலிய நூல்களிலிருந்து சிறந்த பாடல்களைச் சொல்லிக் கொடுத்துவந்தார். பாரதியார் ஏழு பிராயமுள்ளவரா யிருக்கும்போதே தமிழ்ப் பாடல்களை இயற்றத் தொடங்கினர்.

4. பாரதி என்ற பெயர் சரசுவதி தேவியின் திரு நாமங்களுள் ஒன்று. கல்வியிற் பெயர் பெற்றவர்களைப் பாரதி என்று கூறுவது வழக்கம். ஒரு தமிழ்ப் புலவர் சுப்பிரமணியரின் கவிதா சக்தியைப் புகழ்ந்து அவரை நோக்கி, 'நீ ஒரு பாரதியே' என்ருராம், அப்பெயரே அவருக்கு நிலைத்துவிட்டது. இது நடந்தது அவருடைய பதின்மூன்ரும் பிராயத்தில்.

5, பாரதியார் பள்ளிக்கூடப் படிப்பில் அதிகக் கவலை காட்டவில்லை. அவர் அங்குமிங்கும் அலைந்து திரிந்து உலகத்தை நன்ருக உணர்ந்து கொண்டார். ஒருமுறை அவர் காசிக்குச் சென்று அங்கே இரண்டாண்டுகள் தங்கினர். அங்கு அவர் வடமொழி, ஹிந்தி ஆகிய மொழிகளைக் கற்றுக்கொண்டார்.

6. பாரதியார் செல்லம்மாள் என்ற மாதை மணந்து கொண்டார். அப்பெண்மணி சிறந்த குணவமைதி பெற்றவள் ; என்ருலும் பாரதியாருக்கு அவருடன் குடித்தனம் செய்தற்குப் போதிய வருமானம் கிடைக்கவில்லை. அவர் வறுமையால் மிகவும் துன்பப் பட்டார். சில ஆண்டுகள் அவர் புதுச்சேரியில் தங்கி யிருந்தார்.

7. பாரதியார் வறிய வாழ்க்கையை நடத்தி அல்லற் பட்டாராஞலும் அவர் மனம் மிக்க ஊக்கமும் உறுதியும் வீரமும் செம்மையும் நிறைந்திருந்தது. அச்சம் என்பது எள்ளளவும் அவரிடம் காணப்படவில்லை.

அவருக்குத் தம் நாட்டின் மேலும், தம் தாய்மொழியின் மேலும் அளவுகடந்த அன்பு இருந்தது. தமிழ் நாட்டு மக்கள் தங்கள் பண்டைப் பெருமையை மறந்து சோம்பியிருந்ததைக் கண்டு அவர் மனம் நொந்தார். அவர் அவர்களை உறக்கத்திலிருந்து தட்டி யெழுப்பு வதற்காகத் தம் கனிந்த மனத்திலிருந்து வழிந்தோடிய கவிதைகளைப் பாடினர். அப்பாடல்கள் **தேசீயப் பாடல்கள்** என்ற பெயரால் இப்பொழுது பல்லாயிரம் தமிழ் மக்களால் பாடப்பட்டு வருகின்றன.

*8.* பாரதியாருக்குக் குழந்தைகளிடம் மிக்க அன்பு இருந்தது. அவர்களுக்காக அவர் சில எளிய பாடல் களைப் பாடினர். குயில் பாட்டு, கண்ணன் பாட்டு, பாஞ்சாலி சபதம் முதலான பொருள் செறிந்த பல பெரிய கவிகளையும் அவர் உலகுக்கு அளித்தார். அவர் **1921-ஆம்** ஆண்டு செப்டம்பர் மாதம் **11-ஆம்** நாள் இவ்வுலகை விட்டு நீத்தபோது தமிழுலகம் பெரிதும் வருந்திற்று. அந்நாளையே மக்கள் ஆண்டுதோறும் மிகப் புனிதமாகக் கொண்டாடி வருகின்றனர்.

*9.* உலகத்தில் எவ்வளவோ மக்கள் பிறந்து இறக்கின்றனர். அவர்கள் பெயர் அவர்களுடனேயே மறைந்து விடுகிறது. எவருடைய புகழ் அவருக்குப் பின்னும் உலகத்தில் நிற்கிறதோ, அவரே தாம் இறந்தும் இறவாதவர். பாரதியார் அத்தகைய பெரியார்களுள் ஒருவர். அவர் புகழ் தமிழ்நாட்டில் ஒருநாளும் மங்காது.

**10.** பாரதியாரின் குணங்களைப் பற்றியும் அவருடைய தோற்றத்தைப் பற்றியும் அவரை நேரில் அறிந்தவர்கள் பல கட்டுரைகள் எழுதியிருக்கின்றனர். அவற்றுள் ஒன்றைக் கீழே தருகிறோம் :—

**11.** * "பாரதியை நேரில் காணவும் நெருங்கிப் பழகவும் அவருடைய அந்திய காலத்தில்தான் எனக்குச் சந்தர்ப்பம் வாய்த்தது. புதுவையிலிருந்து புறப்பட்ட பிறகுதான். ஒரு நாள் காலை 10 மணி இருக்கும். ஆபீஸில் தபால் பார்த்துக் கொண்டிருந்தேன். கன வேகமாய் ஒரு ஜட்கா வண்டி ஆபீஸை நோக்கி வந்தது. ஆபீஸ் பெயரைப் பார்த்ததும், 'நிறுத்து' என்று கூவினார் வண்டியிலிருந்தவர்; நிற்கிற வரையில் தாங்கவில்லை: குறுக்குக் கம்பியைத் தள்ளிக்கொண்டு கீழே குதித்தார். தள்ளின கம்பி திரும்பி வந்து சொக்காயில் மாட்டிக்கொண்டது. அலக்ஷியமாகக் கையை உதறினார்; சொக்காயின் கை கிழிந்துவிட்டது. அதையும் கவனிக்கவில்லை. ஓடோடியும் உள்ளே வந்தார். நான் இருந்த அறைக்குக் குறுக்குக் கதவுகள் இருக்கக் கண்டு, சற்றுத் தயங்கினார். மெள்ளக் கதவைத் தட்டினார்; பதில் இல்லை. கதவுக்குமேல் தலையை நீட்டி உள்ளே பார்த்தார். என்னைக் கண்டதும் சிறிது லஜ்ஜைப் பட்டார். "யார்?" என்று நான் கேட்டேன். "நான் தான் சுப்பிரமணிய பாரதி" என்றார். "வாருங்கள், உள்ளே வாருங்கள், உட்காருங்கள்" என்றேன்.

12. அன்று கண்ட பாரதி இன்றளவும் என் அகக்கண் முன் நின்றுகொண்டே இருக்கிறார். நடுத்தர உயரம்; ஒற்றை நாடி; மாநிறம் படைத்த மேனி; புரிபுரியாய்ச் சுற்றிய வால் விட்ட தலைப்பாகை; அகன்ற நெற்றி; அதன் மத்தியில் காலணா அளவு குங்குமப்

---

* இப்பகுதி, சுதேசமித்திரன் ஆசிரியர் ஸ்ரீ வீ. ஆர். ஸ்ரீனிவாஸன் அவர்கள் எழுதிய 'தராசு' என்னும் நூலினின்று அவர்களின் அனுமதி பெற்று எடுத்துக் கையாளப்பெற்றது.

பொட்டு, அடர்ந்த புருவங்கள் உருண்ட கண்களைக் காத்து வந்தன. நிமிர்ந்த நாசி வாடின கன்னங்களை விளக்கிக் காட்டியது. முறுக்கிய மீசை மேல்உதட்டை மறைத்தாலும், உறுதி யிழந்த உயிர்நிலையைக் கீழ் உதடு காட்டிவிட்டது; உடல்மீது பித்தான் இல்லாத ஷர்ட்டு; அதைமூட ஓர் அல்பாகாகோட்; வண்டியி லிருந்து குதித்தபோது அதுவும் கிழிந்து விட்டது. நாற்காலியில் உட்கார்ந்தார், நாவெழவில்லை; கண்கள் வட்டமிட்டுக் கொண்டிருந்தன; அறையைச் சுற்றிப் பார்த்தன; என்னையும் ஏற இறங்கப் பார்த்தன. வெகுண்ட கண்கள்; வேதனை வடிந்த கண்கள்; சாந் தம் நிறைந்த கண்கள்; வசியம் மிகுந்த கண்கள். அவை என் உள்ளத்தைக் கொள்ளை கொண்டுவிட்டன. அன்று நான் பாரதி தாஸனாக மாறினேன். பழகப்பழக, நேசம் பாசமாகவே மாறிற்று.

13. பாரதியிடம் நான் கண்ட விசேஷம் என்ன? பால் மணம் மாறாத குழந்தைகளிடம் காணும் குணங் களைக் கண்டேன். சூதுவாது தெரியாது; வேற்றுமை கிடையாது; நயமுண்டு; பயமில்லை; கையிலிருப் பதைப் பகிர்ந்துகொடுப்பார்; நாளையைப் பற்றி நினைக்கமாட்டார்; படாதகஷ்டங்களைப் பட்டார்; தழும்பு தரிக்கவில்லை; அறியாத வயதில் (மூன்றாம் பிராயத்தில்) தாயை இழந்தார்; அநுபவமில்லாத வயதில் (பதினைந்தாவது பிராயத்தில்) போஷகர்கள் ஒரு பக்கம் மறைய, போஷிக்கும் பொறுப்பு இன்னொரு பக்கம் ஏற்பட்டது. இளம்பிராயத்தில் மணம் புரிந்து குடும்ப பாரம் உறைக்கத் தலைப் பட்டது. பிதுரார்ஜிதம் பூஜ்யம்; பிழைப்புக்கு வழி துலங்கவில்லை. பெரிய படிப்பாளி அல்லர்; ஏட்டுப்

படிப்பில் என்றைக்கும் நாட்டம் சென்றதில்லை......... கஷ்ட ஜீவனமும், நஷ்ட நம்பிக்கையும், அறிவை வளர்க்கும் சாதனங்களாக உதவின. கல்லூரியிற் கற்காததைக் கடற்கரையிற் கற்ருர். சென்னையிலும், புதுவையிலும் அவர் கடற்கரை செல்லாத நாள் கிடையாது. கரையில் உட்கார்ந்த வண்ணம், அலைகள் துள்ளித் தாவி, உருண்டு, திரண்டு, புரண்டு, நுரையும் நீருமாய்த் தாண்டவமாடுவதைக் கண்டு களித்தார், இயற்கையிலிருந்து செயற்கை அறிந்தார்......"

14. இத்தகைய பாரதியார் தம் பூதவுடலை இழந்தாலும் புகழுடலுடன் விளங்குகிருர். நாம் அவரைத் தமிழ் நாட்டு அருங் கவிஞர்களுள் ஒருவராகக் கொண்டாடுகிருேம்.

## பயிற்சிகள்

### சொல்லாட்சி

I. (1) சொற்கள் :—அந்திய காலம், அநுபவம், அல்லல், ஒற்றை நாடி, கவிதா சக்தி, தாண்டவம், தாஸன், தேசியம், பகிர்ந்து, பாரதி, பிதுரார்ஜிதம், புனிதம், பூதவுடல், போற்றி, போஷகர், மாநிறம், லஜ்ஜை, ஜமீன்.

(2) 12 - ஆவது பத்தியில் பாரதியாரின் அவயவங்களுக்கு அடைமொழியாக என்ன என்ன சொற்கள் கொடுக்கப்பட்டுள்ளன ?

(3) 13 - ஆவது பத்தியில் வந்துள்ள வினைச் சொற்களையும் வினையெச்சங்களையும் பொறுக்கி யெடுத்து, அவற்றைக் கொண்டு நீங்களாகவே பாரதியாரின் நிலையை வருணிக்க.

## கேள்விகள்

II (1) பாரதியாருக்கும் பள்ளிக்கூடக் கல்வி எவ்வளவு இருந்தது ?

(2) அவர் உலக அறிவை அதிகம் பெற்றிருந்தார்—இது நம் பாடத்தில் எப்படி விளங்குகிறது ?

(3) பாரதியார் கஷ்ட ஜீவனம் செய்து வந்தார் என்பது எப்படித் தெரியவருகிறது ?

(4) பாரதியார் இளமையிற் படித்த நூல்களிற் சிலவற்றைக் கூறுக.

(5) பாரதியார் பாடல்களில் சிலவற்றின் பெயர்களைக் கூறுக.

(6) நாம் சாதாரணமாக யார் யாருடைய பிறந்த நாட்களைக் கொண்டாடுகிறோம் ?

### கட்டுரை

III. (1) பாடத்தில் கூறியவற்றைக் கொண்டு பாரதியாரின் உருவத் தோற்றத்தை வருணிக்க.

(2) உனக்குத் தெரிந்த வேறு யாரேனும் ஒருவருடைய குணாதிசயங்களை எழுதுக.

## இலக்கணம்

### சொல்

IV. எச்சவினை பெயரைக்கொண்டு முடியுமானால் பெயரெச்சம் என்றும், வினையைக்கொண்டு முடியுமானால் வினையெச்சம் என்று பெயர் பெறும். முடிந்து வாக்கியத்தில் பயனிலையாக நிற்குமானால் வினைமுற்று எனப்படும். வினைகளெல்லாம், எச்சமானாலும் முற்றானாலும் இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் என்ற மூன்று காலங்களுள் ஏதேனும் ஒன்றைக்காட்டும்.

பின்வரும் வாக்கியங்களில் உள்ள வினைகளை எடுத்தெழுதி, அவற்றின் வகையையும் காலத்தையும் குறிக்க.

(1) ஜமீன்தார்கள் தமிழ்ப் புலமை வாய்த்து வந்தனர்.

(2) கண்கள் என்னை ஏற இறங்கப் பார்த்தன.

(3) கஷ்டங்கள் அறிவை வளர்க்கும் சாதனங்களாகத் தோன்றின.

### எழுத்து

மெய்யெழுத்துக்கள் வல்லினம், மெல்லினம், இடையினம், என மூன்றாகப் பகுக்கப்படும்.

| | |
|---|---|
| க் ச் ட் த் ப் ற் | இவை வல்லினம். |
| ங் ஞ் ண் ந் ம் ன் | இவை மெல்லினம். |
| ய் ர் ல் வ் ழ் ள் | இவை இடையினம். |

கீழே வரும் சொற்களிலுள்ள மெய்யெழுத்துக்களிலும் உயிர் மெய்யெழுத்துக்களிலும் இம்மூன்று இனங்களும் அமைந்திருப்பதைக் காட்டுக.

சுப்பிரமணிய பாரதியார்
தமிழ்ப் புலவர்
கம்பராமாயணம்

## 15. பாரதியும் பட்டிக்காட்டானும்

[இப்பொழுது விளங்கும் தமிழ்க் கவிஞர்களுள் வித்து வான் சி. தேசிக விநாயகம் பிள்ளை என்பவர் சிறந்து விளங்கு கின்றார். அவருடைய பாடல்கள் எளிமையும் இனிமையும் பொலிந்து விளங்குகின்றன.

" ஒரு பட்டிக்காட்டான் பட்டணம் போனான். அங்கே பாரதியார் பாடலைச் சிலர் இன்னிசையோடு பாடுவதைக் கேட்டான். அவற்றைக்கேட்டு அவன் மனத்திற் பட்டவற் றைத் தன் ஊராரிடம் கூறினான்." இக்கருத்துக்களைக் கொண்டு இப்பாடல் அமைக்கப்பட்டுள்ளது.

பாரதியார் பாடல்களில் சிலவற்றின் பெயர்கள் இப் பகுதியில் கூறப்பட்டுள்ளன. நீங்களும் பாரதியார் பாடல் களைப் படித்து உங்கள் உணர்ச்சிகள் எவ்வாறு இருக்கின்றன என அறிவது நலமாகும்.]

1. பாட்டுக் கொருபுலவன் பாரதியடா—அவன்
பாட்டைப் பண்ணொடொருவன் பாடினானடா
கேட்டுக் கிறுகிறுத்துப்போனேனேயடா—அந்தக்
கிறுக்கில் உளறுமொழி பொறுப்பாயடா

2. சொல்லுக்குச் சொல்லழகு மேறுமேயடா—கவி
துள்ளு மறியைப்போலே துள்ளுமேயடா
கல்லுங் கனிந்துகனி யாகுமேயடா—பசுங்
கன்றும் பாலுண்டிலாது கேட்குமேயடா.

---

* ஆசிரியர் அன்புடன் அளித்த அனுமதி பெற்றுப் பதிப்பிக்கப் பெற்றது.

3\. குயிலும் கிளியும்பாட்டில் கூவுமேயடா—மயில்
குதித்துக் குதித்துநட மாடுமேயடா
வெயிலும் மழையுமதில் தோன்றுமேயடா—மலர்
விரிந்து விரிந்துமணம் வீசுமேயடா.

4\. 'கரும்புத் தோட்டத்திலே'—என்னுங்கவி
காதைச் சுடுதடா;
இரும்பு நெஞ்சமே—நீராய்
இளகி யோடுமடா.

5\. 'செந்தமிழ் நாட்டின்'—முதன்மொழி
செவியிற் சேருமுன்னே,
அந்தமில் லாமல்—உள்ளத்தில்
அமுத மூறுதடா.

6\. 'பாப்பாப் பாட்டிலே'—நெஞ்சைப்
பறிகொடுத் தேனடா
சாப்பா டேதுக்கடா?—சீனி
சர்க்கரை ஏதுக்கடா?

7\. 'எங்கள் நாடு' தான்—பூபாள
இசையி லேறிமேல்
கங்கை யாறுபோல்—உளத்தில்
களிப் பொழுகுதடா.

8\. பெண்டு பிள்ளைகளின்—பெருமை
பெரிதறிந் தேனடா
சண்டைகள் செய்ததெல்லாம்—எண்ணித்
தலை கவிழ்ந்தேனடா.

9\. ஏழை துயரெலாம்—அவனும்
எடுத் தடுக்கையிலே
மூளை கலங்குதடா—விம்மி
மூச்சும் முட்டுதடா.

10. பாவின் நயமெலாம்—நானும்
பகர வல்லேனே?
ஆவின் பாற்சுவையை—நாழி
அளந்து காட்டிடுமோ?

—சி. தேசிகவிநாயகம் பிள்ளை.

## குறிப்புக்கள்

1. ஒரு - ஒப்பற்ற. பண் - இராகம்.

2. ஒரு கவியில் சொற்கள் அழகாய் அமைந்திருக்க வேண்டும். பாட்டு துள்ளலோசையுடன் செல்லவேண்டும். அதன் பொருள் மனத்தை உருக்கவேண்டும். கேட்பவர்தம் மனம் வேறொன்றிலும் செல்லாமல் பாட்டிலேயே பொருந்த வேண்டும். இவ்விலக்கணங்களெல்லாம் பாரதியாரின் பாடல்களில் அமைந்திருந்தனவென்று பட்டிக்காட்டான் கூறுகின்றான்.

மறி - ஆடு. கனி - பழம்.

3. பாடல்கள் குயில் கூவுவது போலவும், கிளி மழலை பேசுவது போலவும் இனிமையா யிருக்கின்றன. மயில் மகிழ்ச்சியுடன் நடனம் செய்வதுபோல் மனம் குதுகலிக்கின்றது. இளவெயில் வீசும்போது உலகம் விளக்கமாயிருப்பது போலவும், மழை பெய்யும்போது உலகம் குளிர்ச்சி யடைவது போலவும் அப்பாடல்களைக் கேட்கும் மனம் மகிழ்ச்சியையும் குளிர்ச்சியையும் பெறும். மலர் மணம் வீசுவது போலப் பாடல்களும் ரம்மியமாக இருக்கின்றன.

4. அந்தமில்லாமல் - முடிவில்லாமல்.

5. பூபாள இசை - பூபாளம் என்ற ராகம்.

6. பாரதியார் மனைவி மக்களின் பெருமைகளைப் பற்றிப் பலவிடங்களிற் பாடியிருக்கிறார். அவற்றைக் கேட்ட பட்டிக்காட்டான் முன்பு தன் மனைவி மக்களுடன் போட்ட சண்டைகளை எண்ணி வெட்கமடைகிறான்.

7. பாரதியார் உலகத்தில் மக்கள் வறுமையால் படும் கஷ்டங்களை யெல்லாம் மிக மனமுருகிப் பாடியிருக்கிறார்.

8. பாவின் சுவையை நாழி அளக்குமோ ? அளக்காது ; அது போல என் மூளைக்குப் பாரதியின் பாடல்களை அறியப் போதிய சக்தி யில்லை என்கிறான்.

நாழி - ஒரு முகத்தலளவை.

## 16. மூடன் கவிதையும் கம்பர் பெருமையும்

[கம்பர் என்ற கவிச்சக்கரவர்த்தி தமிழில் இராமாயணம் பாடியவர். தமிழில் எழுதப்பட்ட காவியங்களில் மிகச் சிறந்தது கம்பராமாயணம். 'கல்வியிற் பெரியவர் கம்பர்' என்ற பழமொழியும் உண்டு. அவரைப்பற்றிப் பல கதைகள் வழங்குகின்றன. அவற்றுள் ஒன்று இப்பாடத்தில் கூறப் பட்டுள்ளது. இது மிகுந்த நகைச்சுவை பொருந்தியதாயும், புலவரின் நுட்ப புத்தியைக் காட்டத் தக்கதாயும் இருக்கும். இவ்வரலாற்றால் குடியானவனின் எளிய குணம், அரசனின் கொடைத்திறம், கம்பரின் சாமர்த்தியம் ஆகிய இவை நன்கு விளங்கும்.

உங்கள் படிப்பின் வேகத்தை அறிய இது தகுந்த பாடம். இதைப் படித்து முடிக்க நீங்கள் எடுத்துக்கொண்ட நேரத்தைக் குறியுங்கள். பின்வரும் கேள்விகளுக்கு உடனே விடை எழுதுக :—

(1) அரசன் எதனில் மடமை கொண்டவன் ; எதில் அற்றவன் ?

(2) குடியானவன் எவ்வாறு வேஷம் தரித்தான் ?

(3) வழியில் கண்ட நண்பன் பாட்டின் எப்பகுதியை உதவினான் ?

(4) காவலாளிகள் ஏன் உழவனைத் தடை செய்யவில்லை ?]

1. ஓரூரில் ஓர் உழவன் இருந்தான். ஒரு சமயம் அவ்வூரில் பெரு மழை பொழிந்ததால் அவன் வயல்க ளெல்லாம் வெள்ளத்தால் அடியுண்டு பாழாகிவிட்டன. அவனும் அவன் மனைவியும் உணவில்லாமல் வருந்தினர்.

2. ஒரு நாள் மனைவி தன் கணவனை நோக்கி, "ஐயா, இந்நாட்டு அரசர் தமிழ்ப் புலவர்களைப் பெரிதும் மதிக்கின்றாராமே! அநேக புலவர்கள் அவர் அவைக்களத்துக்குச் சென்று நிரம்பவும் செல்வம் பெற்று வருகிறார்களென்று ஊரார் சொல்லக் கேட்டேன். தாங்களும் அரசன் முன்னிலையிற் சென்று, ஏதேனுமொரு பாட்டைச் சொல்லி அவர் கொடுப்பதை வாங்கி வந்தால், நாமும் நம் மக்களும் வறுமையால் வாடாமல் வாழலாகாதோ?" என்று கூறி அவனை அரசன்முன் செல்ல வற்புறுத்தினாள்.

3. அச் சொற்களைக் கேட்ட வேளாளன், "பெண்ணே! என்ன உன் அறிவு இருந்தவாறு? 'பெண்ணறிவு என்பது பேதைமையுடைத்து' என்பார்கள். அஃது உன்னளவில் உண்மையாயிற்று. புலவர்கள் பரிசுபெற்று வருகிறார்களென்றால் அவர்கள் என்ன எளியவர்களோ? எத்தனைகாலம் அவர்கள் படித்துள்ளார்கள்? படித்தாலும் பாடல் பாடுவது என்பது இலகுவானதோ? கடவுள் அருள் பெற்றவர்களுக்குத் தானே நல்ல பாடல் பாட முடியும்? நானெங்கே! மன்னர் அவை எங்கே? உழவுக்கும் கவிதைக்கும் எத்தனை தூரம்? எனக்கு எழுதப் படிக்கத் தெரியுமே யல்லாமல் இலக்கணம் முதலியன தெரியுமோ? உன் அறியாமையைக் கண்டு இரங்குகிறேன்" என்றான்.

4. அவள், "நாதா! தாங்கள் சொல்வதை நான் உணராமலில்லை. சோழ மகாராஜர் படை மடம் படைத்தவர் அல்லராயினும் கொடை மடம் கொண்டவர் என்று பலரும் கூறக் கேட்டிருக்கிறேன். புலவர்களுக்கு மட்டும் அவர் கொடுக்கிறார் என்பதில்லையாம்,

புலவர் வேடம் தரித்து எவர் சென்று எதைக் கூறினும், அவர் அன்புடன் அவரை ஏற்று நிரம்பச் சன்மானங்களைக் கொடுத்து அனுப்புகிறாராம்: மேலும், அச்சபையில் பெரும் புலவரான கம்பர் என்றவர் இருக்கிறாராம். அவர் கல்வியறிவில்லாதவர்களிடமும் பெருங் கருணை கொண்டு அரசர்க்குச் சிபார்சு செய்து இனாம் வாங்கிக் கொடுக்கிறாராம். நமக்கு வேறு வழியில்லை. குழந்தைகளின் துயரத்தைப் பார்க்கக்கூடவில்லை. தங்களைப் பொய், களவு, சூது முதலிய குற்றங்களில் ஒன்றையும் செய்ய நான் தூண்டவில்லை; ஏமாற்றவும் சொல்லவில்லை. உங்களுக்குத் தெரிந்தவரையில் ஏதேனும் ஒரு பாடலைக் கட்டிக்கொள்ளுங்கள். கம்பர் இல்லத்துக்கு முன்பே சென்று அவரிடம் அப்பாடலைக் காட்டித் திருத்திக்கொள்ளுங்கள். உண்மையை அவரிடம் கூறிவிடுங்கள். பிறகு கடவுள் விட்டபடி ஆகட்டும்'' என்று சொன்னாள்.

5. குடியானவனுக்குத் தன் மனைவி கூறியது நல்ல வழியென்று தோன்றிற்று. உடனே அவன் வெண்மையான ஒரு துணியை அரைக்கும் மற்றொன்றை மேலுக்குமாக அணிந்துகொண்டு, தலையில் தலைப்பாகை அணிந்து, காதில் கடுக்கனும், கழுத்தில் உருத்திராக்க மாலையும், நெற்றியிலும் உடலிலும் திருநீறும் பூண்டு, கையில் ஓர் எழுத்தாணியும் ஏடும் ஏந்தி வீட்டை விட்டு வெளியேறினான்.

6. பாடல் எப்படி ஆக்குவது என்றே அவன் எண்ணிச் சென்றான். கொஞ்சதூரம் போனதும் சில சிறுவர்கள் தெருவில் சில மரப்பாச்சிகளை வைத்துக் கொண்டு 'மண்ணுண்ணி மாப்பிள்ளையே!' என்று பாடி-

ஆடிக்கொண்டிருந்தனர். உழவன் அதனை உடனே தன் ஏட்டில் எழுதிக்கொண்டான்.

7. சற்று அப்பால் அவன் சென்றவுடன் ஒரு காகம் 'கா' என்று கரைந்ததைக் கேட்டு அவன் 'காவிறையே' என்று வரைந்துகொண்டு மேலே செல்ல, அருகிலிருந்த மாமரக் கிளையிலிருந்து ஒரு குயில் 'கூ' என்று கூவிற்று. அங்கும் அவன் 'கூவிறையே' என்றெழுதிக்கொண்டான்.

8. கொஞ்ச தூரத்துக்கப்பால் சென்றவுடன் ஒரு சிவன் கோயில் தென்பட்டது. அதன் சாக்கடை வழியாக ஒரு பெருச்சாளி ஓடுவதைப் பார்த்து, 'உங்கள் அப்பன் கோயிற் பெருச்சாளி' என்று எழுதிக்கொண்டு மேலே போனான். அங்கே நடுவழியில் நண்பனொருவன் அவனைச் சந்திக்கக் குடியானவனுடைய வேஷத்தைக் கண்டு, அவன் திகைப்படைந்து, 'என்ன அப்பா, புலவர் வேஷம் போட்டாய்?' என்று கேட்டான். உழவன் தான் கையிற் பிடித்த ஏட்டைக் காட்டி, 'நான் பாடியுள்ள பாட்டைப் பார்' என்று அதனைக் காண்பிக்க, நண்பன் அதைப் படித்து "வெகு நன்றாயிருக்கிறது. கன்னு பின்னு மன்னு தென்னுவென்று இப்படியும் ஒரு பாடலுண்டா? இதை யாரிடம் படித்துக் காட்டப் போகிறாய்?" என்று வினவினான். அதற்கு உழவன், 'போடா! போ! அதிருஷ்டமுண்டானால் மண்ணும் பொன்னாகும்' என்று சொல்லி, அந்நண்பன் கூறிய மொழிகளையும் தன் ஏட்டில் எழுதிக்கொண்டு கம்பர் இல்லத்தை நோக்கி விரைந்து சென்றான்.

9. புலவர் பெருமான் அப்பொழுது மன்னன் அவைக்குப் புறப்பட்டுக் கொண்டிருந்தார். உழவன் அவர் கால்களில் சாஷ்டாங்கமாகத் தெண்டனிட்டு

"பிரபுவே, நான் ஓர் ஏழை. கல்வியறிவில்லாதவன். பசிக் கொடுமையால் புலவன் வேடம் தரித்துத் தங்களைக் காண வந்தேன். என் வாயில் வந்தபடி ஒரு பாடலைத் தயாரித்திருக்கிறேன். எப்படியாவது என்னை அரச சபையிற் பெருமைப் படுத்தவேண்டும்" என்று தன் ஏட்டை நீட்டினான்.

10. அவர் அவசரமாக அரண்மனைக்குப் புறப்பட்டுக்கொண்டிருந்ததால் அவ்வேட்டை வாங்கிக்கொள்ளாமலே "நான் அதைப் பார்க்க வேண்டுவதில்லை. அரசன் பெயரை மட்டும் உன் பாடலில் அமைத்துவிடு. தைரியமாய் நடந்துகொள். நான் பார்த்துக்கொள்கிறேன்" என்று சொல்லித் தம் பல்லக்கில் ஏறிச் சென்றார்.

11. உழவன் நேராக அரண்மனைக்குச் சென்று அங்குள்ளவர்களிடம் அரசன் பெயரை விசாரித்தான். அவர்கள் பரிகாசமாக 'சோழாங்கப் பெருமான்' என்றனர். அதனையும் அவன் தன் பாட்டின் இறுதியில் சேர்த்தெழுதிக்கொண்டு அரண்மனையின் உள்ளே நுழைந்தான். புலவர் கோலத்துடன் எவர் வந்தாலும் அவ்வரண்மனையில் வாசற் காவலாளிகள் தடை செய்தல் இல்லை. ஆகையால் உழவன் நேராக அரசவைக்குச் சென்று அரசன் முன் வணங்கி நின்றான்.

12. அரசன் அவனை நோக்கி, "நீர் யார்? வந்த காரியம் யாது?" என்று வினவ, குடியானவன், "மன்னா மன்ன! நான் ஒரு புலவன். தங்கள்மீது ஒரு பாடல் பாடி வந்தேன்; கேட்டருள்க" என்று விண்ணப்பித்தான். அரசனும் சம்மதித்தான். அவன் உடனே சபையை வணங்கிக் கம்பீரமான குரலில்,





"மண்ணுண்ணி மாப்பிள்ளேயே!
காவிறையே! கூவிறையே!
உங்கள் அப்பன் கோவிற் பெருச்சாளி!
கன்ன! பின்ன! மன்ன! தென்ன!
சோழங்கப் பெருமானே!"

என்று பாடி முடித்தான். சபையிலிருந்த புலவர்களும் மந்திரிகளும் 'இப்படியும் ஒரு பாட்டுண்டா!' என்று வியந்தார்கள். அவர்கள் முகத்தில் இகழ்ச்சி நகை ததும்பிற்று. அரசனுக்குக் கோபம் ஒரு புறமும், இரக்கம் ஒரு புறமும் உண்டாயின. உழவன் கம்பர் முகத்தைப் பரிதாபத்துடன் நோக்கினன்.

13. புலவர் உடனே எழுந்து, 'மன்னரேறே! புலவர்கள் பலவகைப் படுவர். எளிய நடையில் பொருள் விளங்கப் பாடுகின்றவர் ஒரு வகையினர். அவர்களுடைய பாடல்கள் பால்போலவிருக்கும். நெருடான

முறையிற் பாடுகின்றவர் மற்ெருரு வகையினர். அவர்களுடைய பாடல்கள் தேங்காய் போலவிருக்கும். ஆயினும், கஷ்டமான செய்யுட்களில் அமைந்துள்ள பொருளைக் காண்பதுதான் இன்பமான காரியம். இப்புலவர் பாடிய பாடல் பின் வகையைச் சார்ந்தது; மிக அருமையா யிருக்கிறது, பொருள் நிறைந்திருக்கிறது; பெரும் புலவர்கள் தம் பாடல்களுக்குத் தாமே பொருள் கூறுவதில்லை. இவருடைய பாடலால் இவரை மிகச் சிறந்த புலமை வாய்ந்தவராகவே நான் மதிக்கிறேன். என் அறிவுக்கெட்டியவரையில் இதன் பொருளைக் கூற முயல்வேன்.

14. "மண் உண்ணி - பூமியை உண்டவனே! திருமால் யுகாந்தத்தில் உலகத்தையெல்லாம் தம் வயிற்றில் வைத்தார் என்பது யாவரும் அறிந்ததே. அரசராகிய தாங்கள் திருமாலாவீர்கள் என்பது இதன் பொருள். 'மன்னனைக் காணில் திருமாலைக் கண்டேனே' என்று பெரியோரும் கூறியிருக்கின்ருர்கள் அல்லரோ?

மா பிள்ளையே. மா-இலக்குமி, பிள்ளையே-மகனே! உலகத்தில் மிக்க செல்வம் படைத்தாரை 'இலக்ஷ்மி புத்திரன்' என்று சொல்வதில்லையா? அதனை அங்கு இப்புலவர் குறிக்கிருர்.

கா இறையே - கா என்பது கற்பகச் சோலை. அது தேவலோகத்தில் உள்ளது. அதற்கு இறைவன் தேவேந்திரன். சோழ மன்னனைத் தேவேந்திர என்று அழைத்தார்.

கூ இறையே - என்ருர்; கூ என்ற சொல்லுக்குப் பூமி என்பது பொருள். இவ்வுலகம் முழுவதையும் ஆளும் மன்னரே என்று வாழ்த்திஞர்.

உங்கள் அப்பன் கோ, என்பதற்கு, 'நீ வழி வழி வந்த அரசப்பெருமை உடையவன்' என்பதும், 'விற் பெருச்சாளி,' என்பதற்கு, 'விற்போரில் புறங்கொடாத ஆண்மை வாய்ந்த சிங்கத்தை ஒப்பாயென்பதும்' பொருளாகும்.

மேலும், கன்னு - கொடையில் கர்ண மகாராஜனை ஒப்பவரே, பின்னு அக்கர்ணனுக்குப் பிந்திப் பிறந்தவனை தருமராஜனைத் தருமத்தில் ஒப்பவரே, மன்னு - மன்னவரே, தென்னு - தெற்கிலுள்ள பாண்டிய நாட்டையும் வென்று, பாண்டிய நாட்டையும் ஆள்பவரே என்றும் கூறினர்.

'சோழ நாடு மட்டும் உன்னுடையதாகாமல் உலகம் முழுமையும் உன் அடியின் கீழாகும் என்பதைக் குறிக்கச் சோழ நாட்டை அங்கமாகக் கொண்ட பெரிய பூமியைப் ஆளும் பெருமானே! என்று பொருள்படச் சோழங்கப் பெருமானே' என்றார்.

15. 'இப்பாடலின் கருத்து எவ்வளவு இனிமையாக அமைந்திருக்கிறது பாருங்கள்! இதை இயற்ற வல்ல புலவரை நாம் எவ்வளவு போற்றினாலும் பொருந்தாதோ?' என்று கம்பர் கூறி முடித்தார்.

16. இச்சொற்களைக் கேட்ட மன்னனும் அவையோரும் பெருமகிழ்ச்சி கொண்டனர். அரசன் உழவனுக்குப் பெரும்பொருளை உதவித் தக்க உபசாரங்கள் செய்து வழியனுப்பினன். அவன் கவிச்சக்கரவர்த்தியாகிய கம்பரை வாயார, மனமார வாழ்த்திக்கொண்டே வீடு சேர்ந்து, தன் மனைவியையடைந்து நடந்த வரலாற்றை அவளுடன் கூறி, வறுமை நீங்கி மகிழ்ச்சியுடன் வாழ்ந்து வரலானன்.

## பயிற்சிகள்

### சொல்லாட்சி

I. (1) **சொற்கள் :**—அரசவை, அவைக்களம், இகழ்ச்சி, இயற்ற, இல்லம், இறைவன், ஏது, கற்பகம், கூ, திருமால், தெண்டனிட்டு, சன்மானம், சிபார்சு, சாஷ்டாங்கமாக, பேதைமை, போற்று, மரப்பாச்சி, யுகாந்தம், வற்புறுத்து, அரசரேறு.

(2) பொருளை விளக்குக :—லக்ஷ்மிபுத்திரன், வாயார.

(3) பெருமை - என்றது ஒரு குணப் பெயர். இதைப்போல் மையில் முடிந்த குணப்பெயர்கள் இப்பாடத்தில் வந்துள்ளவை யாவை ?

(4) பின்வரும் சொற்களுக்கு ஒன்றுக்கு மேற்பட்ட பொருள்கள் கூறுக :—மதி, படி, இல், பெயர், பார், மகிழ், மா, பாடி, பொருள், முடி, கூறு, கா, இறை.

### கேள்விகள்

II. (1) அரசர் தன்மையைப் பற்றி உழவன் மனைவி கூறியவை என்ன ?

(2) கவிதை பாடுவதைப் பற்றி உழவன் யாது கூறினான் ?

(3) 'படைமடம்'—போரில் மடத்தன்மை பெறுதல் என்பது பொருள். அதாவது வீரமில்லாமலிருத்தல். கொடை மடம் - என்றால் கொடுத்தலில் யாருக்குக் கொடுப்பது என்றறியாமை.

இச் சொற்களால் மனைவி கூறியதன் பொருளை விளக்குக.

(4) கம்பரின் கருணையைப்பற்றி நீ என்ன அறிவாய் ?

(5) உழவன் கட்டிய பாடலைச் சொல்லுக. அதன் பகுதிகளை அவன் எங்கெங்கே கற்றுக்கொண்டான் ?

(6) ஒருவர் தம்மைவிடப் பெரியவரைக் கண்டால் அவர் தம் வணக்கத்தைத் தெரிவிப்பது எப்படி ?

(7) கம்பர் பாடலுக்குக் கூறிய பொருளைச் சொல்லுக.

(8) பாடல்கள் பால் போலவும் தேங்காய் போலவும் இருக்கும் என்பதை விளக்குக.

### கட்டுரை

(1) உழவன் தான் பாடல் கட்டினவிதத்தை மனைவிக்குச் சொல்லுவதுபோல் கூறுக.

(2) அரசர் சபையொன்றைப்பற்றி ஆறு வாக்கியங்கள் எழுதுக.

பின்வரும் வாக்கியங்களைக் குறித்தபடி மாற்றுங்கள்.

(1) புலவர்கள் எளியவர்களோ? (வினவை நீக்கிச் சாதாரண வாக்கியமாக மாற்றுக.)

(2) தாங்கள் சொல்வதை நான் உணராமலில்லை. (இல்லை என்பதை நீக்கி உடன்பாட்டு வாக்கியமாக மாற்றுக.)

(3) குற்றங்கள் ஒன்றையும் செய்ய நான் சொல்லவில்லை. ஏமாற்றவும் சொல்லவில்லை. (ஒரே வாக்கியமாகப் பிணைத்தெழுதுக.)

(4) கொஞ்சதூரம் போனதும் சில சிறுவர்கள் விளையாடிக்கொண்டிருந்ததை அவன் கண்டான். (இதை மூன்று சிறு வாக்கியங்களாகச் சிதைக்க.)

(5) ஒரு சிவன் கோயில் அவன் கண்ணில் காணப்பட்டது. (அவன் என்பதை எழுவாயாக மாற்றுக.)

(6) அரசன் குடியானவனை நோக்கி, 'நீ யார்? வந்த காரியம் என்ன?' என்று கேட்டான். மேற்கொள் குறிகளை நீக்கி உரியபடி மாற்றி எழுதுக.

## சொற்கள்

### வினைச்சொல் குறிப்புவினை

(1) இது நான் வாங்கின வீடு. (2) இவன் மாயவரத்தான். (3) இராமன் கரியன்.

இவ்வாக்கியங்களில் பயனிலைகள் யாவை? வீடு, மாயவரத்தான், கரியன் என்பன பயனிலைகள். இவை பெயர்ச் சொற்களாகவோ பெயர்ச் சொற்களிலிருந்து பிறந்தவைகளாகவோ இருக்கின்றன. இவை தொழிலையும் காலத்தையும் காட்டவில்லை. ஆதலின் இவை **குறிப்பு வினை** முற்றுக்கள் எனப்படும்.

இப்படியே பெயர்களிலிருந்து பிறந்த குறிப்புப் பெயரெச்சங்களும் குறிப்பு வினையெச்சங்களும் உண்டு.

**நல்ல** மனிதன் - குறிப்புப் பெயரெச்சம்.

**நன்றாய்ப்** பேசினான் - குறிப்பு வினையெச்சம்.

பின்வரும் வாக்கியங்களிலுள்ள குறிப்பு வினைமுற்று, பெய ரெச்சம், வினையெச்சங்களைப் பொறுக்கி எழுதுக.

(1) கரிய பசுக்கள் இங்கே இல்லை.
(2) கம்பர் பெரிய புலவர்.
(3) உழவன் கம்பீரமாய்ப் படித்தான்.

## எழுத்துப் புணர்ச்சி

### உயிர்முன் உயிர்

பின்வருபவைகளைப் புணர்த்தி எழுதுக :—

வந்த + உடன்
பா + இயற்றினன்
வழி + இல்லை
தீ + எறிந்தது
கணு + ஒடிந்தது
நல்லதே + ஆனாலும்
கை + ஒடிந்தது
சொல்வதோ + உண்டு

பின்வருபவைகளைப் பிரித்துக் காட்டுக :—

எப்படியாக்குவது
உண்மையையறி
உடனேயவன்
கூவென்று
மறுவுலகம்
செய்தவுதவி
கணுவுரை
காவிறை

# 17. கைகேயி தசரதர் சம்வாதம்



[அயோத்தியை யாண்ட தசரத மன்னருக்குக் கோசலை, கைகேயி, சுமித்திரை என்று மூவர் மனைவியர் இருந்தனர். கோசலைக்கு இராமனும், கைகேயிக்கு பரதனும், சுமித்திரைக்கு இலக்குமணனும் சத்துருக்னனும் புதல்வர்களாகப் பிறந்தனர். தசரதர் இராமனுக்குப் பட்டாபிஷேகம் செய்யத் தீர்மானித்திருந்தார். அவர் முன்பொருசமயம் கைகேயி விரும்பிக் கேட்கும் எந்த இரண்டு வரங்களையும் கொடுப்பதாகச் சொல்லியிருந்தார். கைகேயி இராமனைக் காட்டுக்குப் போகச் செய்து, தன் மகன் பரதனுக்கு முடி சூட்ட வேண்டுமென்று எண்ணி, அரசரிடம் தன் இரண்டு வரங்களையும் கேட்கத் தீர்மானித்தாள். பட்டாபிஷேகம் குறிக்கப்பட்ட தினத்துக்கு முதல் நாள் இரவு தசரதர் கைகேயியைக் காணப்போனர்; அவள் மிகுந்த அலங்கோலத்தோடு கிடந்தாள். அப்பொழுது நடந்த வரலாற்றைப் பின்வரும் பாடல் விளக்குகிறது.]

கம்பர் பாடிய இராமாயணத்தை யொட்டி அருணசலக் கவிராயர் என்ற புலவர் இராம நாடகக் கீர்த்தனை என்ற ஒரு நூலை எழுதினர். இப்பாடல் அதிலிருந்து எடுக்கப்பட்டது.

**(நீலாம்புரி ராகம்—ஆதிதாளம்)**

இந்த அலங்கோலமும் இந்த மனே துக்கமும்
ஏன் வந்ததோ? கைகை மின் அரசே!—உன் றன்
சிந்தையில் நினைந்ததை உள்ளங்கை நெல்லிக்கனிபோல்
தெரியச் சொல்வாய், கைகை மின் அரசே! (1)

மற்ருென்றும் இல்லைவரம் எனக்குமுன் நீர் கொடுத்த
வரம் இரண்டும் கேட்கிறேன், மன்னவரே! என்றும்
உற்றது சொன்னல் அல்லோ அற்றது பொருந்தும், நான்
உள்ளது சொன்னேன் காணும் மன்னவரே! (2)

அந்தவரம் இரண்டும் தந்தேன்; இனி உனக்கு
அட்டி சொல்வேனே?' கைகைமின் அரசே! உன்
மைந்தன் இராமன் ஆணை; வார்த்தை புரட்டறியேன்!
வாங்கிக் கொள்வாய், கைகை மின் அரசே! (3)

முன் ஒரு வரம் பரதன் நாடாள மாணிக்க
முடிபெறவேணும், ஐயா மன்னவரே! அதின்
பின் ஒரு வரம் ராமன் காடாளச் சடைமுடி
பெறவேணும், தாரும் ஐயா மன்னவரே! (4)

மலைப்போ ஒருவர் செய்த வஞ்சனையோ என்ன
வார்த்தை சொன்னய்! கைகைமின் அரசே! அது
கலைப்பார் கலைத்தக்கால் கல்லும் கரையும் என்ற
கதையைப்போல் ஆச்சுதே, கைகை மின் அரசே! (5)

கலைப்பாள் கவுசலை உமக்குண்டெனக்கு வேறே
கலைப்பார் ஒருவர் இல்லை, மன்னவரே! நீர்
சலத்தாற் சொல்லுகிறீரோ! சொன்னதே சொன்னது நான்
தடுமாறிச் சொல் அறியேன், மன்னவரே! (6)

பூமியும் தருகிறேன் பரதற்குப் பொன் முடியும்
　　பூட்டுகிறேன், கைகை மின் அரசே! என்
சாமியை என் உயிரை ராமனைப் பிரிந்தால் நான்
　　தரிக்கறியேன், கைகை மின் அரசே ! (7)

என்னுயிர் அவன் போனால் இருக்கறியா தென்றீர்
　　என்ன சத்தியம் இது மன்னவரே? அவனைச்
சின்னம் சிறுவயதில் முனிபின் போகச் சொன்னீர் உம்
　　சீவனுக்குண்டோ துன்பம், மன்னவரே! (8)

கும்பிடுகிறேன் உன்றன் காலையும் பிடிக்கிறேன்
　　கோபம் செய்யாதே கைகை மின் அரசே! நீர்
ஆரைக்கும்பிடுகிறீர்? ஆர்காலில் விழுகிறீர்?
　　அசலார் என்றெண்ணல் ஆமோ? மன்னவரே!

அண்டர் முனிவர் அல்லர், பகையாளிகள் அல்லர்,
　　அசலார் ஒருவர் அல்லர் தெய்வமே! முன்
கொண்ட பெண் சாதிதானே தசரதன் ஆவிக்குக்
　　கூற்றுவன் ஆய்வந்தாளே தெய்வமே! (10)

—இராமநாடகக் கீர்த்தனை

## குறிப்புக்கள்

1. கைகை - கைகேயி. மின் அரசே - ஒளி நிறைந்தவளே, பெண்ணே. உள்ளங்கை நெல்லிக் கனிபோல் - உள்ளங்கையில் வைத்த நெல்லிக்கனி உள்ளும் புறமும் நன்றாய் விளங்குவதுபோல் விளக்கமாக.

2. வரங்களின் வரலாறு :—சம்பராசுரன் என்ற ஒருவனுடன் தசரதன் ஒரு சமயம் போர்புரிந்து வென்றான். அப்பொழுது கைகேயி அவன் இரதத்தை ஓட்டி உதவினாள். அதற்காக அரசன் அவள் விரும்பும் இரண்டு வரங்களைக் கொடுப்பதாக வாக்களித்தான். அவற்றை அவள் இச்சமயத்தில் கேட்கிறாள்.

உற்றது சொன்னால் அற்றது பொருந்தும் - உள்ளதைச் சொன்னால் உடம்பு எரியும் என்ற பழமொழியை ஒத்த கருத்தையுடையது.

3. அட்டி - தடை. இராமன் மீது ஆணை என்றான், அவன் மீது வைத்த ஆசையைக் குறித்து. அடுத்த க்ஷணத்தில் இராமனைக் காட்டுக்கு அவள் துரத்தப் போவதை அவன் உணரவில்லை.

4. சடைமுடி - தவசிகள் சடைமுடியுடன் இருப்பர். இராமனும் தவம் செய்யப் போகவேண்டும் என்கிறாள்.

5. மலைப்போர் - இன்னது சொல்வதென்று தெரியாமல் மயங்குகிறாயோ ? ஒருவர் செய்த வஞ்சனையோ - கூனி என்ற தோழியால் தான் கைகேயி கலைக்கப்பட்டாள். இதைத் தசரதன் அறியான் ; என்றாலும் கைகேயி ஒருநாளும் இப்படிக் கேட்கமாட்டாளே என்றெண்ணி, அரசன் இப்படிக் கேட்டான்.

6. கௌசலையின்மேற் கொண்ட பொறாமையால்தான் கைகேயி இவ்வரங்களைக் கேட்டாள். ஆகையால் 'கலைப்பாள் கவுசலை உமக்குண்டு' என்கிறாள். சலம் - கோபம்.

7. இராமனிடம் தசரதன் வைத்த அன்பை இப்பாடல் காட்டுகிறது.

8. முனி - விசுவாமித்திரர். இராமனைத் தசரதன் ஒரு முறை இம்முனிவருடன் காட்டுக்கு அனுப்பினான்.

9. அண்டர் - தேவர். கூற்றுவன் - யமன்.

'என் உயிருக்கு யமனாய் வந்தவர் தேவர் முதலியோர் அல்லர் என் மனைவியே' என்கிறான்.

## பயிற்சிகள்

### சொல்லாக்கம்

I. (1) எதிரிடைச் சொற்கள் :—உற்றது × அற்றது. உள்ளது × இல்லது உள்ளங்கை × புறங்கை. கொள்வாய் × கொள்ளாய். காடாள × காடாள. பின்—முன்.

(2) பின்வரும் சொற்களின் நேரான உருவங்கள் யாவை ?

அல்லோ, வேணும், ஆச்சுதே, இருக்கறியாது, ஆசை, அசலார்.

### வினாக்கள்

II. (1) இப்பாடலில் வந்துள்ள பழமொழிகள் யாவை ?

(2) கைகேயி தானாக இவ்வரங்களைக் கேட்கவில்லை யென்று என் தசரதன் கருதினான் ?

(3) இராமனிடம் தசரதன் வைத்த அன்பை எந்தப்பாடல் காட்டுகிறது ?

### கட்டுரை

III. இப்பாடலில் வந்துள்ள கதையை வசனமாகவும், பாட்டாகவும் சம்பாஷணை ரூபமாகவும் அமைத்து நடித்துக் காட்டுக.

### இலக்கணம்

IV. (1) இப்பாடலில் ஆச்சரியக்குறி, வினாக்குறி வந்துள்ள இடங்களைக் காட்டுங்கள்.

(2) இப்பாடத்தில் மேற்கோள் குறிகளை வேண்டும் இடங்களில் அமைக்க.

### சொல் - வினைச்சொல்

தொழிலையும் காலத்தையும் காட்டா வினைகள் குறிப்பு வினைகள் எனப்படும் என்று முன் பாடங்களில் கற்றுக் கொண்டீர்கள். அவற்றைக் காட்டும் வினைகள் தெரிநிலை வினைகள் எனப்படும். இவ்விரண்டிலும் வினைமுற்று, பெயரெச்சம், வினையெச்சம் என்ற பாகுபாடுகள் உண்டு.

பின்வரும் வாக்கியங்களிலுள்ள முற்றுக்கள், எச்சங்களுக்கு இலக்கணம் கூறுக. தெரிநிலைகளுக்குக் காலம் காட்டுக :—

(1) நீ வரங்களை வாங்கிக் கொள்வாய்.
(2) நீர் இராமனை முனி பின் போகச் சொன்னீர்.
(3) இஃது ஒருவர் செய்த வஞ்சனையோ ?
(4) இராமனைப் பிரியின் நான் உயிர் தரியேன்.
(5) என் அன்புள்ள மகனை எப்படிப் பிரிவேன் ?
(6) நான் திட்டமாய்ச் சொன்னேன்.

### புணர்ச்சி இலக்கணம்

பின்வரும் சொற்களைப் புணர்த்திக் காட்டுக :—

| உயிர் முன் மெய் | மெய் முன் உயிர் |
|---|---|
| தெரிய+சொல் | வரம்+இரண்டும் |
| வாங்கி+கொள் | மின்+அரசே |
| போக+சொன்னீர் | வேணும்+ஐயா |
| நெல்வி+கனி | ஒருவர்+அல்லர். |

## 18. விஞ்ஞான வளர்ச்சியும் பிரயாண வசதிகளும்

[புதிய அறிவுகளால் மனிதன் எப்படி முன்னேறி வருகின்றான் என்பதையும், இக்காலத்தில் பிரயாண வசதிகள் எவ்வளவு மேன்மையாய் அமைந்திருக்கின்றன என்பதையும் இப்பாடம் கூறும். சிலவகை நூதன ஆராய்ச்சிகளைப் பற்றியும் இப்பாடம் தெரிவிக்கும். ஒருமுறை இதனை ஆழ்ந்து படித்து அவ்வாராய்ச்சிகளை வரிசைப் படுத்துக. இது வேகமாகப் படித்தற்குரியதன்று ஆழ்ந்து படித்தற்குரியது.]

1. மனிதன் ஆறறிவு படைத்தவன். அவனுடைய ஆற்றலுக்கு அளவேயில்லை. அவ்வாற்றல்களால் அவன் தன் வாழ்வை நாளுக்கு நாள் முன்னேற்றிக்கொண்டு வருகிறான். புதிய புதிய அறிவுகளை அவன் பெறுகிறான். அவ்வறிவுகளால், புதிய புதிய பொருள்களையும் கருவிகளையும் அவன் கண்டுபிடிக்கிறான். அவற்றால் அவன் தன் வாழ்க்கையை மேன்மைப்படுத்திக் கொள்கிறான்.

2. ஆதியில் மனிதன் காட்டுத் தன்மையுள்ள விலங்குபோலவே வாழ்ந்தான். அவனுக்குக் குடியிருக்க வீடு இல்லை; உடுக்க உடை இல்லை; கையாள ஏனங்கள்

கிடையா. நெருப்பு உண்டாக்க அவன் வழி அறிய வில்லை.

3. கொஞ்சம் கொஞ்சமாக அவன் அறிவில் முன்னேற்றமடையத் தொடங்கினன். விலங்குகள் குகைகளில் தங்குவதையும், பறவைகள் கூடு கட்டுவதையும், சிலந்தி வலை பின்னுவதையும் அவன் பார்த்துத் தனக்கும் இருப்பிடம் ஒன்று வேண்டுமென்பதை அறிந்தான். குளிரையும் வெயிலையும் தாங்க உடையின் அவசியத்தை அவன் உணர்ந்தான். காடுகளில் மூங்கில்கள் ஒன்றேடொன்று உராய்ந்துகொள்வதால் நெருப்பு உண்டாவதைப் பார்த்துத்தானும் கற்களை ஒன்றேடொன்று மோதி நெருப்பு உண்டாக்கும் முறையைத் தெரிந்துகொண்டான்.

4. இக்காலத்து மனிதனைப் பாருங்கள். அவன் பெரிய நகரங்களில் பல மாடிகளுள்ள இல்லங்களில் வசிக்கிறன். அவனுடைய நவநவமான ஆடைகளை அழகாக வெளுத்து மடித்துத் தன்னை அலங்கரித்துக் கொண்டு உலாவுவதைப் பாருங்கள். அவன் உண்ணும் உணவு வகைகள்தாம் எத்தனை? மின்சார வண்டிகளிற் சென்றும், ஆகாய விமானத்திற் பறந்தும், நீராவிக் கப்பல்களிற் பிரயாணம் செய்தும் அவன் நொடியில் காதவழி சென்றுவிடுகிறன். எவ்வளவு தூரத்தில் பேசப்படுவதையும் அவன் ரேடியோவின் வழியாகக் கேட்டறிகிறன். இன்னும் இன்று அவன் அனுபவித்து வரும் சுகவாழ்வு முறைகளை எண்ணல் முடியாது.

5. இவ்வளவு முன்னேற்றங்களுக்கும் மனிதனின் அறிவு வளர்ச்சியே காரணம். இவ்வளர்ச்சி பலதுறைப்படும். அவற்றுள் ஒவ்வொன்றையும் பற்றி நாம் அறிய வேண்டியது அவசியம். மனிதன் தன் போக்குவரவு

முறைகளில் எவ்வாறு மேன்மை யடைந்திருக்கிறுன் என்பதைக் காண்போம்.

## பிரயாண வசதிகள்

6. சென்ற நூற்ருண்டில் காசி முதலிய தூரத்திலுள்ள இடங்களுக்குச் சென்றவர்கள் கால்நடையாகச் சென்றும், பல்லக்குகளில் ஏறியும், குதிரைகளின் மேல் சவாரி செய்தும், மாட்டு வண்டிகளிற் போயும் தம் பிரயாணங்களைச் செய்துவந்தனர். இத்தகைய பிரயாணமொன்றனைக் குறித்தே ‘ மாதம் போம் காதவழி ’ என்று ஒரு புலவர் பாடினுர். பதினெட்டாம் நூற்ருண்டில் இங்கிலாந்திற் பிறந்த ஜார்ஜ் ஸ்டீவென்சன் என்றவர் நீராவி எஞ்சின் செய்யும் விதத்தைக் கண்டறிந்து முதன் முதல் இருப்புப்பாதை வண்டித் தொடரை உலகுக்கு அளித்தார். அக்காலத்திலிருந்த ஆங்கிலேயர் ஸ்டீவென்சனைக் கண்டு நகைத்து அவருடைய எஞ்சினுல் உலகத்துக்கு நாசம் உண்டாகிவிடும் என்றெண்ணினுர்கள். ஆனுல், இப்போது உலகில் ரயில் வண்டிகளைப் பற்றித் தெரியாதவர்களே இரார் என்று சொல்லலாம். மணிக்கு எழுபது மைல்களுக்கு மேல் அவை ஓடத்தக்கனவா யிருக்கின்றன.

7. இக்காலத்தில் துவிச்சக்கர வண்டிகள் செய்யும் முறைகளும் கண்டுபிடிக்கப்பட்டன. ஆனுல் ரப்பரைப் பக்குவப்படுத்தி ‘டயர்’களாக உபயோகிக்கும் விதம் தெரிந்த பிறகுதான் துவிச்சக்கர வண்டிகள் அதிகமாக வழங்கலாயின. காற்றை ரப்பர்க் குழலில் அடைத்து டயருக்குள் போடும் வழியை டன்லப் என்ற துரையே முதன் முதல் கண்டறிந்தார். அதற்குப்பின் துவிச்சக்கர வண்டிகளும் மோட்டார் வண்டிகளும் உலகத்

தில் எங்கும் பரவலாயின. சக்கரங்களை வேகமாகச் சுழலச் செய்யும் முறையை ஓர் எஞ்சினீர் கண்டு பிடித்தார்.

8. ஆறுகளில் ஓடங்களும், கடல்களில் படகுகளும் கட்டு மரங்களும் செல்வதை நீங்கள் பார்த்திருக்கிறீர்களல்லவா ? இவையே பண்டைக் காலத்திலும் இருந்த மரக்கலங்கள். பிறகு அந்நிய நாட்டு வியாபாரம் வலுவடைய, பெரிய பாய்மரக் கப்பல்கள் ஏற்படலாயின. பதினாறும் நூற்றாண்டுக்குப் பின் ஐரோப்பியர்கள் நீண்டதூரம் கப்பல்களிற் சென்று அமெரிக்கா, ஆப்பிரிக்கா, ஆஸ்திரேலியா முதலிய புதிய இடங்களைக் கண்டறிந்தார்கள். அக்காலத்துக்குப் பிறகு வலுவுள்ள பெரிய கப்பல்கள் கண்டறிய வேண்டிய அவசியம் உண்டாயிற்று. நீராவியின் உபயோகத்தால் பெரிய இஞ்சின்களைக் கப்பல்களில் அமைத்து மிகப் பெரிய பிரயாணக் கப்பல்களும், மூட்டைக் கப்பல்களும் செய்யப்பட்டன. ஆயிரக்கணக்கான மனிதர்கள் ஏறிச்செல்வதற்குப் போதுமான இடமுள்ள கப்பல்களும், லக்ஷக்கணக்கான டன் நிறையுள்ள சாமான்களை ஏற்றிச் செல்லத்தக்க கப்பல்களும் செய்யப்பட்டன. இக்காலத்தில் ஒரு பெரிய கப்பல் செய்வதற்குப் பல லக்ஷம் பவுன்கள் செலவாகும். பிரயாணிகளுக்கு வேண்டிய எல்லாச் சௌகரியங்களும் அக்கப்பல்களில் அமைக்கப்பட்டிருக்கும். சாமான் கப்பல்களில் சாமான்கள் எந்தச் சீதோஷ்ண ஸ்திதியிலும் கெடாமலிருக்கத் தக்க ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கும்.

9. பழைய காலம் முதற்கொண்டே அரசர்கள் கப்பல்களிலிருந்தே பகைவர்களுடன் சண்டைபோடும்

வழக்கத்தைக் கொண்டிருந்தனர். இக்காலத்திலோ பெரிய பீரங்கிகளைச் சுமந்து செல்லும் சண்டைக் கப்பல்களும், ஆகாயவிமானங்கள் பலவற்றைச் சுமந்து செல்லும் விமானந் தூக்கிக் கப்பல்களும், நீரினுள் மூழ்கி நீண்ட தூரம் சென்று மேலே எழும்பும் நீர் மூழ்கிக் கப்பல்களும், தண்ணீர்க்குள்ளேயே சென்று பகைவர்களின் கப்பல்களைத் தாக்கும் 'டார்பிடோ' என்னும் ஆயுதங்களும் இன்னும் பலவும் ஏற்பட்டிருக்கின்றன.

*10.* இராமாயணத்தில் புஷ்பக விமானத்தில் இராமர் முதலியோர் ஏறிச் சென்றதையும், ஜீவக சிந்தாமணியில் மயிற்பொறியில் விசயை பறந்து போனதையும் நாம் கேட்டிருக்கிறோம். ஆனால் அவை போன்றவற்றை நாம் கண்ணுற் கண்டதில்லை. இன்றோ, நாள்தோறும் ஆகாய விமானங்கள் நம் தலைக்குமேல் வட்டமிடுவதைப் பார்ப்பது நமக்குப் பழக்கமாகிவிட்டது.

*11.* அமெரிக்கா கண்டத்தில் ரைட் என்ற பெயருள்ள இரண்டு சகோதரர்கள் அரிதில் முயன்று *1903*-ம் ஆண்டில் ஓர் ஆகாயவிமானத்தைச் செய்து முதன் முதலில் பறக்கவிட்டுப் பார்த்தார்கள். அது வானத்தில் 850 அடி தூரம் பறந்தது. இவ்வெற்றி முயற்சிக்குப்பின் ஆகாயவிமானத் தொழில் பல விதங்களிலும் மேன்மையுற்றது.

*12.* இவ்விமானங்களிற் பலவகைகள் இருக்கின்றன. நூறு மனிதர்களுக்கு மேல் ஏறிக்கொள்ளக் கூடிய விமானங்களும், சாமான்களை ஏற்றிச் செல்லும் விமானங்களும், சண்டையிடும் விமானங்களும், குண்டு வீசும் விமானங்களும் இக்காலத்திற் பல்கிக் கிடக்கின்றன,

13. இவ்வாறு, நிலம், நீர், வானம் என்ற மூன்றிடங்களிலும் மிகவும் வேகமாகவும், அதிக சௌகரியமாகவும் போக்குவரவுகள் நிகழ வழிகளை மனிதன் தன் புத்திக்கூர்மையால் ஆக்கிக்கொண்டுவிட்டான். இன்னும் வருங்காலத்தில் இவ்வசதிகள் மிகச் சீரடையும் என்பதற்கு ஐயமேயில்லை. இவற்றால் உலகத்தில் தூரம் என்பதே இல்லாமற் போயிற்று. உலகத்தில் எப்பாகத்தில் கிடைக்கும் பொருள்களும் மற்ற எல்லாப் பாகங்களுக்கும் சடுதியிலே கொண்டு செல்லப்படுகின்றன. மக்களும் நொடியில் இடம் விட்டு இடம் பெயர்ந்து செல்லுகின்றனர். இவற்றால் நாட்டு வேற்றுமை, மொழிவேற்றுமை, மதவேற்றுமை என்பன யாவும் ஒழிந்து உலகம் முழுவதையும் ஒன்றென்ற உணர்ச்சி ஏற்பட்டு வருகிறது. இது மிகவும் நல்லதன்றோ ?

## பயிற்சிகள்

### சொல்லாட்சி

I. (1) **சொற்கள் :—** ஆற்றல், ஏனம், ஐயம், சீதோஷ்ண ஸ்திதி, துறை, நவநவமான, நூற்றாண்டு, மல்கி, விஞ்ஞானம், வேற்றுமை.

(2) இப்பாடத்தில் பல ஆங்கிலச் சொற்கள் வந்துள்ளன; அவற்றை எடுத்தெழுதி அவற்றிற்குரிய ஆங்கில எழுத்துக்களைக் குறிக்க.

(3) பிழையில்லாமல் எழுதுக :—

நூற்றாண்டு, துவிச் சக்கரம், ஆஸ்திரேலியா, பிரயாணி, சீதோஷ்ண ஸ்திதி, புஷ்பக விமானம், நாள்தோறும், ஜீவக சிந்தாமணி.

(4) பின்வரும் வினைகளிலிருந்து பிறக்கும் பெயர்கள் யாவை ?
வாழ், அறி, போ, வா, ஏறு, உணர்.

### கேள்விகள்

II. (1) ஆறறிவு - தொடுதல் உணர்ச்சி, ஓசை, நாற்றம், ஒளி, ருசி, பகுத்தறிவு என்பன.

இவ்வாறறிவும் நமக்கு எவற்றால் பெறப்படுகின்றன ?

(2) விலங்குகளிடமிருந்து மனிதன் கற்றுக்கொண்டவை யாவை ?

(3) ரேடியோவின் பயன் என்ன ?

(4) ஸ்டீவென்ஸனைக் கண்டு மக்கள் என் நகைத்தனர் ?

(5) டன்லப் கண்டு பிடித்தது என்ன ?

(6) இக்காலத்தில் நீரிற் செல்லக்கூடிய சாதனங்கள் யாவை ?

(7) நீர் மூழ்கிக் கப்பலென்றால் என்ன ?

(8) பண்டைக் காலத்திலும் மக்கள் வானத்திற் செல்லும் வகையை அறிந்திருந்தனர் என்பதற்கு உதாரணங்கள் யாவை ?

(9) ஆகாய விமானங்களிற் சில வகைகளின் பெயர்களைக் கூறுக.

(10) இலகுவான பிரயாண வசதிகளால் மக்கள் பெற்ற நன்மைகள் யாவை ?

### கட்டுரை

III. (1) நீ செய்த ஏதேனும் ஒரு ரயில் பிரயாணத்தைக் குறித்து ஒரு கட்டுரை எழுது.

(2) ஆகாயவிமான மொன்றை நீ பார்த்ததாகக் கருதி அதைக் கண்டவுடன் உனக்குத் தோன்றியவற்றைச் சித்திரித்து எழுது.

## இலக்கணம்

### வினையும் பெயரும்

பெயர்ச் சொற்கள் வினைச் சொற்களாக உபயோகப்படும் விதத்தை முன் பாடங்களிற் படித்தீர்கள். வினைச் சொற்களும் சில மாறுதல்கள் பெற்றுப் பெயர்ச் சொற்களாகலாம்.

உதாரணம் :—

கல் — கல்வி, கற்றவன்.

நட - நடத்தல், நடந்தவன்.

இவற்றுள் கல்வி, நடத்தல், என்பன தொழிற் பெயர்கள். அவை தொழிலை மட்டும் காட்டுகின்றன.

கற்றவன், நடந்தவன் என்பன தொழில் செய்தவனையும், காலத்தையும் காட்டுகின்றன. இவற்றிற்கு வினையாலணையும் பெயர்கள் என்று பெயர்.

பின்வரும் வினைகளிலிருந்து தொழிற் பெயர்களும், வினையாலணையும் பெயர்களும் ஆக்கி எழுது :—

கொல் - படி - இடு.

### புணர்ச்சி

பின்வரும் சொற்களைப் புணர்த்தி எழுதுக :—

| உயிர் முன் மெய் | மெய்ம்முன் மெய் |
|---|---|
| தெங்கு + காய் | மண் + குடம் |
| பூ + செடி | மகன் + தந்தை |
| பனை + காய் | கல் + சட்டி |
| வழி + செல் | கள் + குடம் |
| நெருப்பு + பந்து | மரம் + கூடு |
| கேட்டு + பார் | விளம் + காய். |

பின் வருவனவற்றைப் பிரித்தெழுதுக :—

| | |
|---|---|
| முன்னேற்றம் | முதன் முதல் |
| பதினெட்டு | வருங்காலம் |
| நூற்றாண்டு | ஒன்றோடொன்று |

—

# செய்யுட் பகுதி

## 1. கடவுள் வாழ்த்து

### கலைமகள்

1. படிக நிறமும் பவளச் செவ்வாயும்
கடிகமழ்பூந் தாமரைபோற் கையும்—துடியிடையும்
அல்லும் பகலும் அனவரத முந்துதித்தால்
கல்லுஞ்சொல் லாதோ கவி ? —கம்பர்

2. வெள்ளைக் கலையுடுத்து வெள்ளைப் பணிபூண்டு
வெள்ளைக் கமலத்து வீற்றிருப்பாள்—வெள்ளை
அரியா சனத்தில் அரசரோ டென்னைச்
சரியா சனம்வைத்த தாய் —காளமேகப்புலவர்

### பொது

3. வானாகி மண்ணாகி வளியாகி ஒளியாகி
ஊனாகி உயிராகி உண்மையுமாய் இன்மையுமாய்க்
கோனாகி யான் எனதென் றவரவரைக் கூத்தாட்டு
வானாகி நின்றாயை என்சொல்லி வாழ்த்துவனே !
—மாணிக்கவாசகர்

4. மண்ணுநீ ; விண்ணுநீ ; மலையுநீ ; கடலும்நீ ;
எண்ணுநீ ; எழுத்துநீ ; இரவுநீ ; பகலுநீ ;
பண்ணுநீ ; பாவுநீ ; பாட்டு நீ ; தொடருநீ ;
அண்ணனீ ; அமலனீ ; அருளுநீ ; பொருளுநீ.
—பெருந்தேவபாணி

### குறிப்புக்கள்

கலைமகள், நாமகள், சரஸ்வதி—இவை ஒரு பொருளன.

1. படிகம் - ஸ்படிகம் (கண்ணாடி). பவளச் செவ்வாயும் - பவளம்போல் சிவந்த உதடுகளும். கடி - மணம். பூந்தாமரை - தாமரைப்பூ. துடி - உடுக்கை. அல் - இரவு. அனவரதமும் - எப்பொழுதும். 'கல்லும் கவி சொல்லும்' என்றதால் மனிதர் கவிஞர் ஆவது திண்ணம் என்று கூறியவாறு.

2. கலை - துணி. பணி - ஆபரணம். கமலம் - தாமரை. அரி ஆசனம் - சிங்காதனம். சரி ஆசனம் - சமானமான ஆசனம்.

3. வான் - ஆகாயம். மண் - பூமி. வளி - காற்று. ஒளி - வெளிச்சம். ஊன் - மாமிசம் (உடல்). உண்மையுமாய் - உள்ள பொருளுமாய். இன்மையுமாம் - (கண்ணுக்குக் காணப்படாமையால்) இல்லாப் பொருளுமாய். கோன் ஆகி - அரசனாகி. 'யான்; என்னுடையது' என்று ஒவ்வொருவரையும் நினைக்கச் செய்து ஆடச் செய்பவனாகி. நின்றாயை - நின்ற உன்னை. என் - என்ன சொற்களை.

4. விண் - ஆகாயம். எண் - கணக்கு. எழுத்து - நூல். 'எண்ணும் எழுத்தும் கண்ணெனத் தகும்' என்றதோடு ஒப்பிடுக. பண் - இராகம், பாடல். பாட்டு - செய்யுள். தொடர் - சொல் தொடர். (செய்யுளும் வசனமும்.) அண்ணல் நீ - நீ பெரியோன். அமலன் நீ - நீ மலமற்றவன். மலம் - அழுக்கு. பொருள் - உண்மையான பொருள்.

## வினாக்கள்

1. கலைமகளின் உருவத் தோற்றம் எத்தகையது ?
2. அவளுடைய ஆசனம் யாது ?
3. கலை, பணி, பூண்டு—இரு பொருள் கூறுக.
4. கலைமகளின் உடல், உடை, பணி இவற்றின் நிறம் யாது ?
5. புலவர்களை அரசர்கள் தம்மோடு ஒப்ப வைப்பவர் என்பது எதனால் தெரியவருகிறது ?
6. ஐம்பூதங்களாவன: நிலம், நீர், ஆகாயம், காற்று, நெருப்பு—இவற்றுள் மூன்றும் பாடலில் எவை வந்துள்ளன ? கடவுள் பூதங்களாக விளங்குகிறார் என்பது எதனால் புலப்படுகிறது ?
7. நம்மைக் கூத்தாடச் செய்பவர் யார் ?

8 4-ஆவது பாடலில் ஐம்பூதங்களுள் எது கூறப்படவில்லை?
9. கடவுள் எல்லாம் ஆவார் என்பது எப்படிச் சொல்லப்படுகிறது?

## 2. நல்வழி

பாலும் தெளிதேனும் பாகும் பருப்புமிவை
நாலும் கலந்துனக்கு நான் தருவேன்—கோலஞ்செய்
துங்கக் கரிமுகத்துத் தூமணியே ! நீஎனக்குச்
சங்கத் தமிழ்மூன்றும் தா. (1)

சாதி இரண்டொழிய வேறில்லை சாற்றுங்கால்
நீதிவழுவா நெறிமுறையின்—மேதினியில்
இட்டார் பெரியோர் ; இடாதார் இழிகுலத்தோர்
பட்டாங்கில் உள்ளபடி. (2)

உள்ள தொழிய ஒருவர்க் கொருவர்சுகம்
கொள்ளக் கிடையா குவலயத்தில்—வெள்ளக்
கடலோடி மீண்டு கரையேறி னல்என் ?
உடலோடு வாழும் உயிர்க்கு. (3)

ஆற்றுப் பெருக்கற் றடிசுடு மந் நாளும் அவ்வா(று)
ஊற்றுப் பெருக்கால் உலகூட்டும்—ஏற்றவர்க்கு
நல்ல குடிப்பிறந்தார் நல்கூர்ந்தார் ஆனாலும்
இல்லையென மாட்டார் இசைந்து. (4)

ஆண்டாண்டு தோறும் அழுது புரண்டாலும்
மாண்டார் வருவரோ மாநிலத்தீர் !—வேண்டா
நமக்கும் அதுவழியே நாம்போம் அளவும்
எமக்கென்னென் றிட்டுண் டிரும். (5)

ஒருநாள் உணவை ஒழியென்றால் ஒழியாய்
இருநாளுக் கேலென்றால் ஏலாய்—ஒருநாளும்

என்னோ வறியாய் இடும்பைகூர் என்வயிறே!
உன்னோடு வாழ்தல் அரிது. (6)

பிச்சைக்கு மூதல் குடிவாழ்க்கை பேசுங்கால்
இச்சைபல சொல்லி இடித்துண்கை—சிச்சீ
வயிறு வளர்க்கைக்கு மானம் அழியா(து)
உயிர்விடுகை சால உறும். (7)

செய்தீ வினையிருக்கத் தெய்வத்தை நொந்தக்கால்
எய்த வருமோ இருநிதியம்?—வையத்(து)
அறும்பாவம் என்னவறிந் தன்றிடார்க் கின்று
வெறும்பானை பொங்குமோ மேல்? (8)

பெற்றார் பிறந்தார் பெருநட்டார் பேருலகில்
உற்றார் உகந்தார் எனவேண்டார்—மற்றோர்
இரணம் கொடுத்தால் இடுவர்; இடாரே
சரணம் கொடுத்தாலும் தாம். (9)

சேவித்தும் சென்றிரந்தும் தெண்ணீர்க் கடல்கடந்தும்
பாவித்தும் பாராண்டும் பாட்டிசைத்தும்—போவிப்பம்
பாழின் உடம்பை வயிற்றின் கொடுமையால்
நாழி அரிசிக்கே நாம். (10)

நீரும் நிழலும் நிலம்பொதியும் நெற்கட்டும்
பேரும் புகழும் பெருவாழ்வும்—ஊரும்
வரும்திருவும் வாழ்நாளும் வஞ்சமில்லார்க் கென்றும்
தரும்சிவந்த தாமரையாள் தான். (11)

பாடுபட்டுத் தேடிப் பணத்தைப் புதைத்துவைத்துக்
கெடுகெட்ட மானிடரே! கேளுங்கள்—கூடுவிட்டிங்(கு)
ஆவிதான் போயினபின் யாரே அனுபவிப்பார்?
பாவிகாள்! அந்தப் பணம். (12)

வேதாளம் சேருமே ; வெள்ளெருக்குப் பூக்குமே ;
பாதாள மூலி படருமே—மூதேவி
சென்றிருந்து வாழ்வளே ; சேடன் குடிபுகுமே ;
மன்றோரஞ் சொன்னர் மனே. (13)

ஆன முதலில் அதிகம் செலவானுல்
மான மழிந்து மதிகெட்டுப்—போனதிசை
எல்லார்க்கும் கள்ளனுய் ஏழ்பிறப்பும் தீயனுய்
நல்லார்க்கும் பொல்லனும் நாடு. (14)

ஒன்றை நினைக்கின் அதுவொழிந்திட் டொன்ருகும் ;
அன்றி அதுவரினும் வந்தெய்தும் ;—ஒன்றை
நினையாத முன்வந்து நிற்பினும் நிற்கும் ;
எனையாளும் ஈசன் செயல். (15)

உண்பது நாழி உடுப்பது நான்குமுழம்
எண்பது கோடிநினைந் தெண்ணுவன—கண்புதைந்த
மாந்தர் குடிவாழ்க்கை மண்ணின் கலம்போலச்
சாந்தனையும் சஞ்சலமே தான். (16)

மரம் பழுத்தால் வெளவாலை வாவென்று கூவி
இரந்தழைப்பார் யாவருமங் கில்லை—சுரந்தமுதம்
கற்று தரல்போல் கரவா தளிப்பரேல்
உற்றார் உலகத் தவர். (17)

வெட்டெனவை மெத்தெனவை வெல்லாவாம்; வேழத்தில்
பட்டுருவும் கோல்பஞ்சிற் பாயாது ;—நெட்டிருப்புப்
பாரைக்கு நெக்குவிடாப் பாறை பசுமரத்தின்
வேருக்கு நெக்கு விடும். (18)

கல்லானே யானுலும் கைப்பொருளொன் றுண்டாயின்
எல்லாரும் சென்றங் கெதிர்கொள்வர்—இல்லானை

இல்லாளும் வேண்டாள்மற் றீன்றெடுத்த தாய்வேண்டாள்
செல்லா தவன்வாயிற் சொல். (19)

பூவாதே காய்க்கும் மரமுமுள ; மக்களுநளும்
ஏவாதே நின்றுணர்வார் தாமுளரே—தூவா
விரைத்தாலும் நன்றாகா வித்தெனவே பேதைக்(கு)
உரைத்தாலும் தோன்றா துணர்வு. (20)

—ஔவையார்.

1. கோலம் - அழகு. துங்கம் - உயர்ந்த. கரிமுகம் - யானை முகம். தூ - பரிசுத்தமான. மணியே - இரத்தினம் போன்றவனே. சங்கத் தமிழ் மூன்றும் - சங்கத்தாரால் போற்றப்பட்ட இயல், இசை, நாடகம் என்ற மூவகைப்பட்ட தமிழையும்.

2. சாற்றுங்கால் - (ஆராய்ந்து) சொல்லும்போது. இட்டார் - (ஏழைகளுக்குக்) கொடுத்தவர். இடாதார் - கொடாத உலோபிகள். பட்டாங்கு - நீதிநூல்.

3. உள்ளது - உள்ள சுகம். குவலயம் - பூமி. சுகம் கிடையா. என் - என்ன பயன் ? என்ன பாடுபட்டாலும் உள்ளதே அமையும் ; அதிகம் கிடைக்காது.

4. ஆறு உலகு ஊட்டும். ஏற்றவர் - யாசகர். இசைந்து - மனமொப்பி. இச்செய்யுளும் 2-ஆம் செய்யுளும் பொருள் ஒற்றுமை யுடையன. கர்ணன், இளையான்குடிமாற நாயனர் இவர்களின் வரலாறுகள் இக்கருத்துக்கு ஒத்த உதாரணங்கள்.

5. அது - சாவது. எமக்கு என் - எது வந்தால் எனக்கு என்ன இட்டு உண்டு இரும்.

6. என்னோ அறியாய். இடும்பை - துன்பம். கூர் - மிகுந்த.

7. மூத்த - முதிர்ந்த. இச்சை - இனிய சொற்கள். இடித்து உண்கை - பிறரால் இடிக்கப்பட்டு உண்ணல். சால - மிக உறும் - பொருந்தும்.

8. தீவினை - பாவம். எய்த - அடைய. இருநிதியம் - பெரிய செல்வம். வையத்து பாவம் அறும் - பூமியில் பாவம் நீக்கத்தக்கது.

வெறும் பானை - அரிசியிடாத பானை ; புண்ணியம் செய்யாத உயிருக்கு ஒப்பு.

9. என வேண்டார் - உலோபிகள். இரணம் - காயம். உறவினர்க்கும் நண்பர்களுக்கும் கொடார் ; திருடர்களுக்குக் கொடுப்பர்.

10. வயிறு வளர்க்க மனிதர் செய்யும் தொழில்கள் பல.

11. சிவந்த தாமரையாள் - இலக்ஷ்மி. திரு - செல்வம். வாழ் நாள் - ஆயுள்.

12. கூடு - உடல். ஆவி - உயிர்.

13. வேதாளம் - ஒருவகைப் பேய். பாதாள மூலி - கறையான். சேடன் - பாம்பு. மன்று - நியாய சபையில். ஓரம் - பொய்க் கட்சி.

14. நாடு - அறிந்துகொள். அளவுக்கு மிஞ்சிச் செலவு செய்வதால் உண்டாகும் கேடுகள் சொல்லப்பட்டன.

15. அது - நினைத்த ஒன்று. ஒன்று - மற்றொன்று. எல்லாம் ஈசன் செயல் என்பது கூறப்பட்டது.

16. கண்புதைந்த - அறிவுகெட்ட. மண்ணின் கலம் எப்பொழுது உடையுமோ என்று எப்பொழுதும் கவலைப்படுதல். சாந்தனையும் - சாகும்வரை.

17. இரந்து - கெஞ்சி. கன்று + ஆ = கற்று. கற்று அமுதம் சுரந்து தரல்போல ; கொடுத்தால் உலகத்தவர் உறவினராவர்.

18. வேழம் - யானை. நெட்டிருப்புப்பாரை - நீண்ட இரும்புப் பாரை. நெக்குவிடா - பிளவுபடாத.

19. செல்வத்தின் பெருமை சொல்லப்பட்டது.

20. தூவா - தூவி. தூவி விரைத்தாலும் முளையுண்டாகா வித்தைப்போல. பேதை - மூடர்.

## கேள்விகள்

1. பொருள் கூறுக :—மேதினி, பட்டாங்கு, குவலயம், ஏற்றவர், இடும்பை, நிதியம், திரு, சிவந்த தாமரையாள், பாதாள மூலி, உற்றார், கற்று.

2. பின்வரும் உபமானங்களால் விளங்கும் நீதிகள் யாவை : —

வெறும் பானை பொங்குமோ மேல் ?

மரம் பழுத்தால் வௌவாலை அழைப்பார் இல்லை.

வேழத்தில் பட்டுருவும் கோல்பஞ்சிற் பாயாது.

இருப்புப்பாரைக்கு நெக்குவிடாப் பாறை மரத்தின் வேருக்கு நெக்கு விடும்.

பூவாதே காய்க்கும் மரமுமுள.

தூவா விரைத்தாலும் நன்றாகா வித்து.

3. ஈகையின் மேன்மையைக் கூறும் பாடல்கள் யாவை ?

4. பெரியோர் யாவர் ? சிறியோர் யாவர் ?

5. உள்ளதுதான் கிடைக்கும் என்பது எந்தப் பாட்டால் தெரிகிறது ?

6. வறண்ட காலத்திலும் ஆறு எப்படிப் பயன்படும் ?

7. ஏழையான காலத்தும் கொடுக்கக்கூடியவர் யாவர் ?

8. 'வேண்டா ; நமக்கும் அது வழி'—எது வேண்டாம் ? வழி எது ?

9. வயிறே, உன்னோடு வாழ்தல் அரிது. ஏன் ?

10. இருநிதியம் யார்க்கு வரும் ?

11. உலோபிகளின் தன்மை என்ன ?

12. வயிற்றுப் பிழைப்புக்காக மக்கள் என்னென்ன செய்கின்றனர் ?

13. வஞ்சமிலார் பெறுபவை யாவை ?

14. பணத்தை நாம் என்ன செய்யவேண்டும் ? ஏன் ?

15. ஓரம் சொன்னவர்க்கு என்ன நேரும் ?

16. மிதமிஞ்சிச் செலவு செய்வார்க்கு என்ன நேரும் ?

17. எல்லாம் அவன் செயல் என்பது எப்படி உண்மையாகும் ?

18. மண்ணின் கலம் சாந்தனையும் சஞ்சலம் கொடுப்பது ஏன் ? மண்ணின் கலம் எதற்கு ஒப்பு ?

19. உலகத்தவர் எப்பொழுது உறவினர் ஆவர் ?

20. ஆ அமுதம் சுரப்பது—எதற்கு ஒப்பு ?

21. இனிய வார்த்தையின் மேன்மை என்ன ?

22. கொடிய சொற்களால் காரியமாகாது ? எவற்றைப்போல ?

23. பொருளில்லாதவர்க்கு என்ன நேரும் ?

24. பூவாதே காய்க்கும் மரமுமுள — இதற்கு உபமேயம் என்ன ?

25. பேதைக்கு உணர்வு உரைத்தாலும் தோன்ருது. எதைப் போல ?

## 3. அறப்பளீசுவர சதகம்

[சதகம் என்பது நூறு செய்யுட்களையுடைய நூல் என்று பொருள்படும். தமிழில் பல சதகங்கள் உண்டு. முன்காலத்தில் இளமையான மாணவர்கள் பல சதகச் செய்யுட்களை மனப்பாடம் பண்ணி வந்தனர்.

அறப்பள்ளி என்னும் தலத்தில் கோயில்கொண்டருளிய சிவபெருமான்மீது இச்சதகம் பாடப்பட்டது. மதவேள் என்ற ஒரு பிரபுவின் பக்திப் பெருமையையும் இப்பாடல்கள் புகழும். ஆகவே, ஒவ்வொரு பாடலின் இறுதியிலும் "அருமை மதவேள் அனுதினமும் மனதில்நினை தருசதுர கிரிவளர் அறப்பளீசுவர தேவனே" என்ற தொடர் அமைந்திருக்கும். சதுரகிரி என்பது அறப்பள்ளியிலுள்ள மலையின் பெயர். இது சேலம் ஜில்லாவிலுள்ள நாமக்கல் என்ற ஊருக்கு அருகில் உள்ளது.

இந்நூலைப் பாடியவர் அம்பலவாணக் கவிராயர் என்பவர். இராமாயண நாடகக் கீர்த்தனை பாடிய அருணசலக் கவிராயரின் மூத்த புதல்வர். இவர் சுமார் 160 வருடங்களுக்கு முன் வாழ்ந்தவர்.

இப்பாடல்கள் சிறந்த நீதிகளைக் கொண்டுள்ளன. இவற்றைப் பொருள் தெரிந்து மனப்பாடம்பண்ணி இராகத்துடன் உரைக்கக் கற்றுக்கொள்ள வேண்டும்.]

## பொருள் தேடிச் செலவு செய்யும் வகை

1. புண்ணிய வசத்தினால் செல்வமது வரவேண்டும் ;
பொருளை ரட்சிக்க வேண்டும் ;
புத்தியுடன் அதுவொன்று நூருகவே செய்து
போதவும் வளர்க்க வேண்டும் ;
உண்ணவேண் டும் ;பின்பு நல்லவஸ்த்ரா பரணம்
உடலில் தரிக்க வேண்டும் ;
உற்றபெரி யோர்,கவிஞர், தமர்,ஆது லர்க்குதவி
ஓங்குபுகழ் தேட வேண்டும் ;
மண்ணில்வெகு தருமங்கள் செய்யவேண்டும் ; உயர்மோக்ஷ
வழிதேட வேண்டும் ; அன்றி
வறிதிற் புதைத்துவைத் தீயாத பேர்களே
மார்க்கம்அறியாக் குருட ராம் ;
அண்ணலே ! கங்கா குலத்தலைவன், மோழை தரும்
அழகன்,எம தருமை மதவேள்
அனுதினமும் மனதில்நினை தருசதுர கிரிவளர்
அறப்பளீசுர தேவனே !

### குறிப்புரை

செல்வம் புண்ணியவசத்தால் வரவேண்டும். ரட்சிக்க - காக்க. போதவும் - மிகவும். இவ்வடியில் பொருள் வரவும், வளர்ச்சியும் கூறப்பட்டன.

வஸ்திர ஆபரணம் - உடைகளும் நகைகளும். தமர் - தம்மவர், உறவினர். ஆதுலர் - வறியவர். இவ்வடிகளில் செல்வத்தைச் செலவிடும் வழிகள் காட்டப்பட்டுள்ளன.

ஓங்கு புகழ் - மிக்க புகழ். அன்றி - அல்லாமல். வறிதில் - வீணாக. ஈயாத பேர்கள் - கொடாதவர்கள். மார்க்கம் - நல்வழி. அண்ணல் - பெரியோன். கங்காகுலம் - வேளாளர் குலம். மோழை பூபதி என்ற பெயருடையவர் மதவேளின் பிதா ஆவர். அனுதினமும் - தினந்தோறும்.

### பயிற்சி

இப்பாடலில் வந்த கருத்துக்கள் நல்வழிப் பாடல்களிலும் வந்துள்ளன. அவற்றை எடுத்தெழுக.

## திருமங்கை இருப்பிடம்

2. நற்பரி முகத்திலே, மன்னவ ரிடத்திலே,
நாகரிகர் மாமனையிலே,
நளினமலர் தன்னிலே, கூவிளம் தருவிலே,
நறைகொண்ட பைந்துளவிலே,
கற்புடையர் வடிவிலே, கடலிலே கொடியிலே,
கல்யாண வாயில் தனிலே,
கடிநக ரிடத்திலே, நற்செந்நெல் விளைவிலே,
கதிர்பெறு விளக்கதனிலே,
பொற்புடைய சங்கிலே, மிக்கோர்கள் வாக்கிலே,
பொய்யாத பேர்பாலிலே,
பூந்தடம் தன்னிலே, பாற்குடத் திடையிலே,
போதகத் தின்சிரசிலே,
அற்பெருங் கோதைமலர் மங்கைவாழ் இடமென்பர் ;
அண்ணல்எம தருமை மதவேள்
அனுதினமும் மனதில்நினை தருசதுர கிரிவளர்
அறப்பளீசுர தேவனே !

### குறிப்புரை

பரி - குதிரை. நாகரிகர் - கருணையுடையவர். மாமனை - சிறந்த வீடு. நளின மலர் - தாமரைப்பூ. கூவிளம் தரு - வில்வமரம். நறை - மணம். பைந்துளவு - பசுமையான துளசி. கற்புடையர் - கற்புடைய பெண்டிர். வடிவு - உடல். கொடி - அரசர் கொடி ; கோயிலில் எடுக்கும் கொடியுமாம். கடிநகர் - காவலையுடைய பட்டணம். கதிர் - ஒளி. பொற்பு - அழகு. பால் - இடம். தடம் - குளம். போதகம் -

யானை. சிரசு - தலை. அல்பெரும் கோதை - இருளையொத்த பெரிய கூந்தல். மலர் மங்கை - தாமரையில் வசிக்கும் லக்ஷ்மி.

### பயிற்சி

இப்பாடலில் கூறப்பட்டவற்றுள் உன் வீட்டில் எவையெவை உண்டு ?

## குறைவுற்றும் குணம் கெடாமை

3. தறிபட்ட சந்தனக் கட்டைபழு தாயினும்
சார்மணம் பழுதாகுமோ ?
தக்கபால் சுவறிடக் காய்ச்சினும் அதுகொண்டு
சாரமது ரம்குறையுமோ ?
நிறைபட்ட கதிர்மணி அழுக்கடைந் தாலும்அதின்
நீள்குணம் மழுங்கிவிடுமோ ?
நெருப்பிடை உருக்கினும் அடிக்கினும் தங்கத்தின்
நிறையுமாற் றுக்குறையுமோ ?
கறைபட்ட பைம்புயல் மறைத்தாலும் அதுகொண்டு
கதிர்மதி கனம்போகுமோ ?
கற்றபெரி யோர்மகிமை அற்பரறி கிலரேனும்
காசினி தனிற்போகுமோ ?
அறிவுற்ற பேரைவிட் டகலாத மூர்த்தியே !
ஐயனே ! அருமை மதவேள்
அனுதினமும் மனதில்நினை தருசதுர கிரிவளர்
அறப்பளீசுர தேவனே !

### குறிப்புரை

தறிபட்ட - வெட்டப்பட்ட. பழுதாயினும் - கேடடைந்து போனாலும் (தேய்தல் முதலியன பெற்றுப் பழுதானாலும்). சார் மணம் - அதனைச் சேர்ந்துள்ள மணம். ‘அரைக்கினும் சந்தனம்தன் மணம் அறாது’ என்ற பழமொழியையும் உணர்க. சுவறிட - சுண்ட.

அதுகொண்டு - அதனால். சார மதுரம் - சாரமாகிய இனிப்பு. 'அட்டாலும் பால் சுவையிற் குன்றாது' என்பதை ஒப்பிடுக.

நிறைபட்ட கதிர் மணி - மிகுந்த ஒளியுள்ள இரத்தினம். நீள் குணம் - மிகுந்த குணம். மழுங்கி - குறைந்து. நிறையும் மாற்றும் - கனமும் மாற்றும்.

கறை பட்ட - கரிய நிறமுள்ள. பைம்புயல் - நீலமேகம். கதிர்மதி - ஒளிவீசும் சந்திரன். கனம் - மேன்மை. காசினி - பூமியில்.

### கேள்விகள்

(1) சந்தனத்தின் குணம் என்ன ?

(2) இப்பாடத்தில் மணம், ருசி, ஒளி, தன்மை, இவை எவ்வெப்பொருளுக்குக் கூறப்பட்டன ?

(3) பெரியோர் மகிமையை அறியாதவர் யார் ?

(4) கடவுள் யாரைவிட்டு அகலமாட்டார் ?

## இதனால் இன்ன முறையனும் எனல்

4. தன்னால் முடிக்கவொண் ணாதகா ரியம்வந்து
தான்முடிப் போன் தமையனும் ;
தன்றலைக் கிடர்வந்த போதுமீட் டுதவுவோன்
தாய்தந்தை யென்னலாகும் ;
ஒன்னார் செயுங்கொடுமை யால்மெலிவு வந்தபோ(து)
உதவுவோன் இட்ட தெய்வம் ;
யுத்திபுத் திகள்சொல்லி மேல்வருங் காரியம்
உரைப்பவன் குரு வென்னலாம் ;
எந்நாளும் வருநன்மை தீமைதன தென்னவே
எண்ணிவரு வோன் பந்துவாம் ;
இருதய மறிந்துதன் சொற்படி நடக்குமவன்
எவ்னெனினு மவனே சுதன் ;

அந்நார மும்பணியு மெந்நாளு மேபுனையும்
அண்ணலே! அருமை மதவேள்
அனுதினமும் மனதில்நினை தருசதுர கிரிவளர்
அறப்பளீசுர தேவனே!

### குறிப்புரை

ஒண்ணுத - முடியாத. தமையன் - அண்ணன். தன் தலைக்கு இடர் வந்தபோது மீட்டு உதவுவோன். இடர் - துன்பம். மீட்டு - அத்துன்பத்தினின்றும் மீட்டு.

ஒன்னுர் - பகைவர். மெலிவு - துன்பம்; தாழ்வு. இட்ட - இஷ்ட. யுத்தி - யுக்தி, யோசனை.

நன்மை தீமைகளைத் தனக்கு வந்ததாக எண்ணுபவன். பந்து - உறவினன். இருதயம் - மனம். எவன் எனினும் - யாவனே ஆனாலும். சுதன் - மகன்.

அ நாரம் - அந்தக் கங்கை. பணியும் - பாம்பும். புனையும் - தரிக்கும். சிவபிரான் தம் சடையில் கங்கையையும் பாம்பையும் அணிந்திருப்பர்.

### கேள்விகள்

(1) தமையன் என்பவன் யாவன்?
(2) எவனைத் தந்தை என்னலாகும்?
(3) பகைவரால் மெலிவு வந்தபோது உதவுபவன் யாவன்?
(4) குருவென்று எவனைப் பாவிக்கலாம்?
(5) சுதனின் தன்மை என்ன?
(6) சிவபிரான் முடியில் உள்ளவை யாவை?

## இதற்கு இது வேண்டும் எனல்

5. தனக்குவெகு புத்தியுண் டாகினும், வேறொருவர்
தம்புத்தி கேட்க வேண்டும்;
தானதிக சூரனே யாகினும், கூடவே
தளசேக ரங்கள் வேண்டும்;

கனக்கின்ற வித்துவான் ஆகினும், தன்னினும்
கற்ருேரை நத்த வேண்டும் :
காசினியை யொருகுடையில் ஆண்டாலும், வாசலில்
கருத்துள்ள மந்திரி வேண்டும் ;
தொனிக்கின்றசங்கீத சாமர்த்தியன் ஆகினும்
சுதிகூட்ட ஒருவன் வேண்டும் ;
சுடர்விளக் காயினும், நன்ருய் விளக்கிட
தூண்டுகோல் ஒன்று வேண்டும் ;
அனற்கண்ண னே !படிக சங்கநிகர் வண்ணனே !
ஐயனே ! அருமை மதவேள்
அனுதினமும் மனதில்நினை தருசதுர கிரிவளர்
அறப்பளீசுர தேவனே !

### குறிப்புரை

தான் அதிக சூரனே ஆகினும். சூரன் - வீரமுள்ளவன். தளம் - படை. சேகரம் - கூட்டம். கனக்கின்ற - பெருமையுள்ள. கனம் - பெருமை. நத்த - விரும்ப. காசினி - பூமி. வாசல் - (சபை) வாசல் ; கொலுமண்டபம்.

தொனிக்கின்ற - இனிய ஓசையை எழுப்புகிற. சுதி - சுருதி. சுடர் - ஒளி (வீசும்).

அனல்கண்ணன் - நெருப்பாகிய நெற்றிக் கண்ணை உடையவனே. படிகம் - பளிங்கு. சங்கம் - சங்கு. நிகர் - ஒத்த. வண்ணனே - நிறமுடையவனே. சிவபிரான் நிறம் வெண்மை என்பது.

### கேள்விகள்

(1) புத்திசாலியும் பிறர் புத்தியை என் நாடவேண்டும்?

(2) எவருக்கும் மற்ருெருவருடைய உதவி வேண்டும் என்பதற்கு உதாரணங்கள் யாவை ?

(3) கடவுளின் நெற்றிக்கண் யாது ? கடவுள் மன்மதனை நெற்றிக்கண்ணல் எரித்த கதை யாது ?

(4) கடவுளின் நிறம் எவற்றின் நிறத்தை ஒத்தது ?

## நன்னகர்

6. வாவிபல கூபமுடன் ஆறருகு சேர்வதாய்
மலைகாத வழியி னுளதாய்,
வாழைகமு கொடுதெங்கு பயிராவ தாய்ச்செந்நெல்
வயல்கள் வாய்க் கால்கள் உளதாய்,
காவிகம லம்குவளை சேமேரி யுள்ளதாய்க்
கனவர்த்த கர்கள், மறைவலோர்
காணரிய பலகுடிகள் நிறைவுள்ள தாய், நல்ல
காவலன் இருக்கை யுளதாய்த்
தேவரா லயம்ஆடல் பாடல்அணி மாளிகை
சிறக்கவுள தாய்ச் சற்சனர்
சேருமிட மாகுமோர் ஊர்கிடைத் ததில்அதிக
சீவனமு மே கிடைத்தால்
ஆவலொ டிருந்திடுவ தேசொர்க்க வாசமென்
றறையலாம் ; அருமை மதவேள்
அனுதினமும் மனதில்நினை தருசதுர கிரிவளர்
அறப்பளீசுர தேவனே !

### குறிப்புரை

வாவி - தடாகம். கூபம் - கிணறு. ஆறு அருகு சேர்வதாய். காதவழியின் மலை உளதாய். காதம் - பத்துமைல் தூரம். கமுகு - பாக்கு மரம். காவி - நீலோற்பலம். செங்குவளை. கமலம் - தாமரை. கன - பெரிய. வர்த்தகர் - வியாபாரிகள். மறைவலோர் - வேதங்களில் வல்லவர் அந்தணர். காண் அரிய - வேறெங்கும் காண்பதற்கு அரிய. காவலன் - அரசன். ஆலயம் - கோவில். அணி - அழகுள்ள. சற்சனர் - நல்லோர். அதிக சீவனம் - உயர்ந்த வருவாய். அறையலாம் - சொல்லலாம்

கட்டுரை

(1) நல்ல கிராமத்துக்குரிய இலக்ஷணங்களை ஒருமிக்க அமைத்து ஒரு கட்டுரை எழுதுக.

(2) உன் கிராமத்தின் தன்மைகள் எப்படி யிருக்கின்றன வென்று உன் நண்பனுக்கு ஒரு கடிதம் எழுதுக.

## 4. தனிப் பாடல்கள்

1. சிவஞான யோகிகள் என்ற பெரியாரிடம் அவருடைய சமையற்காரர் 'இன்று என்ன சமைப்பது?' என்று கேட்க அவர் கூறியது.

சற்றே துவையலரை ; தம்பியொரு பச்சடிவை
வற்றலே தேனும் வறுத்துவை ;—குற்றமில்லை
காயமிட்டுக் கீரைகடை ; கம்மென வேமிளகுக்
காயரைத்து வைப்பாய் கறி.

காயம் = பெருங்காயம், மிளகுக்காய் - மிளகாய்.

2. பாண்டியன் திருமணத்தில் ஒரு புலவர் துன்புற்றுக் கூறியது.

வண்டமிழைத் தேர்ந்த வழுதி கலியாணத்(து)
உண்ட பெருக்க முரைக்கக்கேள்—அண்டி
நெருக்குண்டேன் தள்ளுண்டேன் நீள்பசியி னாலே
சுருக்குண்டேன் சோறுண்டி லேன்.

வண்தமிழ் - வளப்பமுள்ள தமிழை. தேர்ந்த - நன்றாகக் கற்ற. வழுதி - பாண்டியன். அண்டி - பலருடன் நெருங்கி. நெருக்கு உண்டேன். தள்ளுண்டேன். சுருக்கு உண்டேன். சோறு உண்டிலேன்.

3. திருமலைராயன் பட்டினத்தில் அரசர் அவைப் புலவர்கள் காளமேகரை அவமதிக்க, அவர் அவர்களை நோக்கி நீங்கள் கவி

களானால் உங்களுக்குக் கவி (குரங்கின்) உறுப்புக்கள் எங்கே என்று பரிகசிக்கின்றனர்.

வாலெங்கே? நீண்ட வயிறெங்கே? ஈரிரண்டு
காலெங்கே? உட்குழிந்த கண்ணெங்கே?—சாலப்
புவிராசர் போற்றும் புலவீர்காள்! நீவிர்
கவிராசர் என்றிருந்தக் கால்.

ஈரிரண்டு - நான்கு. உள் குழிந்த கண். சால - மிகவும். புவிராசர் - பூமியை ஆளும் மன்னர். போற்றும் - புகழும். கவிராசர் - வித்துவான்கள். குரங்கு அரசர்கள்.

4. ஓர் அரசன் கம்பரை அலட்சியம் செய்ய, அவர் கோபித்து அவனை நோக்கிக் கூறிய செய்யுள்.

மன்னவனும் நீயோ? வளநாடும் உன்னதோ?
உன்னையறிந் தோதமிழை ஓதினேன்?—என்னை
விரைந்தேற்றுக் கொள்ளாத வேந்துண்டோ? உண்டோ
குரங்கேற்றுக் கொள்ளாத கொம்பு?

வான் - பெரிய. ஓதினேன் - படித்தேன். வேந்து - அரசன்

## கல்வியின் பெருமை

5. வெள்ளத்தே போகாது;
வெந்தணலில் வேகாது; வேந்த ராலும்
கொள்ளத்தான் முடியாது;
கொடுத்தாலும் நிறைவின்றிக் குறைவுறாது;
கள்ளர்க்கோ மிக அரிது;
காவலோ மிகஎளிது; கல்வி யென்னும்
உள்ளத்தே பொருளிருக்க
ஊரெல்லாம் பொருள்தேடி உழல்வ தென்ன!

—விவேக சிந்தாமணி.

வெம் தணல் - கொடிய நெருப்பு. உழல்வது - துன்புறுவது.

6. ஒரு முறை ஔவையார் ஓர் இல்லத்துள் உணவுக்காக நுழைந்தார். அவ்வீட்டு மனைவி மனவெறுப்புடன் அவருக்கு உண வளிக்க, அவர் அவ்வுணவை உண்ண விரும்பாமல் கூறியது.

காணக்கண் கூசுதே; கையெடுக்க நாணுதே;
மாணொக்க வாய்திறக்க மாட்டாதே;—வீணுக்கென்
என்பெல்லாம் பற்றி எரிகின்ற தையையோ!
அன்பில்லாள் இட்ட அமுது.

மாண் ஒக்க - மாட்சிமை பொருந்திய. என்பு - எலும்பு.

## விடு கதைகள்

7. பெருவாய் கொண்டிருக்கு மொருபூதமல்ல;
பெயர்த்துண்ட வழிகக்கும் வௌவாலல்ல;
திருவாக முடன்பாயும் புலியுமல்ல;
நேர்கணக்கு மறிவிக்குங் கணக்கனல்ல;
ஒருவாமற் போர்க்களம்போம் வீரனல்ல;
உதவிசெய்வார் கைபார்க்கும் அகதியல்ல;
திருவாரு மரசமுத்ரை பெற்றிருந்தும்
தேசாதி பதியல்ல செப்புவீரே.

இது மரக்கால்.

திருவாகமுடன் - காரியத்தைச் செய்து முடிக்கும் தன்மையுடன், ஒருவாமல் - பின்வாங்காமல். போர்க்களம் - நெல்போர் குவிக்கும் களம். அகதி - கதியற்றது. திருஆரும் - செல்வம் பொருந்திய. தேசாதிபதி - அரசன்.

8. சூரியனை மறைக்குமது குடையுமல்ல;
சுகம்பெறப் பிள்ளைகள் பயிலும் கழகமல்ல;
பாரதனிற் பூசைகொள்ளும் கடவுளல்ல;
பணிப்பெண்கள் சூழநண்ணும் ராணியல்ல;

வாரணத்திற் குணவளிக்கும் பாகனல்ல ;
மண்ணவர்கள் வேந்தெனவே வழுத்தினும்
போர்புரிய வராமல்மணி மேடை நிற்கும்
புண்ணிய சாலியை யறிந்து புகலுவீரே.

இஃது அரசமரம்.

அரச மரத்தடியில் பள்ளிக்கூடங்கள் இருப்பது வழக்கம். கழகம் - சபை. பார் - பூமி. பணி - பூஜை செய்யும். வாரணம் - யானை. வேந்து - அரசு. வழுத்தினும் - புகழ்ந்தாலும்.

### கேள்விகள்

(1) சிவஞான முனிவரின் உணவாக அமைந்தவை யாவை ?

(2) பாண்டியன் திருமணத்தில் புலவர் பெற்றவை யாவை ? எதைப் பெறவில்லை ?

(3) காளமேகர் புலவர்களை எவ்வாறு பரிகசித்தார் ?

(4) 'புலவர்க்குச் சென்ற விடமெல்லாம் சிறப்பு' என்பதைக் கம்பர் எவ்வாறு கூறினர் ?

(5) குரங்கேற்றுக் கொள்ளாத கொம்புண்டோ? இதனால் கம்பர் கூறக் கருதியது என்ன ?

(6) கல்வியை எவை கெடுக்கமாட்டா ?

(7) செல்வத்தை எவை கெடுக்கும் ?

(8) ஔவையார் அன்பில்லாள் இட்ட அமுதைக் கண்டவுடன் என்ன பாடபெட்டார் ?

(9) விடுகதைகளைப் பாராமற் சொல்லுக.




Printed at the Sadhu Press, Royapettah, Madras
Paper Issue Card No. M. S. 115
for G. S. Viswa & Co., Triplicane, Madras
Paper Issue Card No. M. S. 103—Copies 3,000—10-4-46.